


உ

தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 6 ] பரீதாவி சித்திரை (13-4-72) [கருணை 7

## புத்தாண்டு வாழ்க!

உலகில் பிறந்த ஒவ்வொருவரும், நலமாக வாழ்வதற்கே ஆசைப்படுகிறோம்.

நலமாக வாழ்வதற்குப் பொருள் வேண்டும். ஆனால், அந்தப் பொருளானது அறவழியில் வந்ததாயிருந்தால் மட்டுமே இன்பம் பயக்கும்; இல்லாவிட்டால், அது துன்பத்தையே தரும்.

அறவழியில் வந்த பொருளால் பெறப்படுகிற இன்பம், இறுதியில் நாம் மோட்சம் அடைவதற்கும் அனுகூலமான மனப்பரிபாகத்தை உருவாக்கித் தரும். மற்றைய இன்பங்களைப்போல், அது நம்முடைய பரகதிக்கு ஓர் தடையாக இராது.

எனவே, பேரின்பம், அதற்கு முன்னோடியான உலகியல் இன்பம், அதற்குக் காரணமான பொருள் இம்மூன்றும், அறம் என்ற ஒன்றையே தமக்கு அடித்தளமாகக் கொண்டிருக்கின்றன.

அந்த அறவாழ்க்கையில் நாம் உறுதியோடு நிற்பதற்கான ஆற்றலை, இப்புத்தாண்டிலே இறைவன் நமக்கு நல்குவானாக!

ஆசிரியர்

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி: நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், சென்னை-87.

# நித்ய கர்மாக்களை எப்போது விடலாம்?



**பகவான்**
**ஸ்ரீ ராமகிருஷ்ண**
**பரமஹம்ஸர்**

பக்தி மார்க்கத்தில் போகிற வர்கள் பகவானுடைய அவ தாரங்களையும் ஏற்றுக்கொள் கின்றனர்.

வேதாந்தத்தின்படி, அவதார மூர்த்திகளுக்கு இடமில்லை. ராமன் கிருஷ்ணன் போன்றவர் கள் சச்சிதானந்தக் கடலில் தோன்றும் வெறும் அலைகளாம்.

மனிதனுக்குப் பாரமார்த்திகப் பேரன்பைக் காட்டியருளுதற்கு, அவதார புருஷர் வருகிறார்.

பசு பால் தருகிறது. பசுவின் மடியே பாலைத் தருதற்கு உற்ற இடம். அவதார புருஷர் பசு வின் மடி போன்றவர். தெய் வீகம் அனைத்தும் அவரிடத்துத் திரண்டிருக்கிறது.

அவதார புருஷர்களுக்கும் தேகாத்ம புத்தி அல்லது உடலைப் பற்றிய உணர்ச்சி இருக்கிறது. உடல் உணர்ச்சியோடு கூடிய ஸ்ரீராமன், காணாமல்போன சீதை யைக் குறித்துக் கண்ணீர் சிந்தி அழுதான்.

பாலர்கள் துணியால் கண்ணைக் கட்டிக்கொண்டு விளையாடுவது போன்று அவதார புருஷர்கள் வேண்டுமென்றே அகங்காரத்தை வருவித்துக் கொண்டு, அதில் கட்டுண்டவர்கள் போன்று நடந்து கொள்கின்றனர்.

அவதார புருஷர்கள் வேண்டு மென்றே அகங்காரம் என்னும் துணியால் தங்கள் கண்களைக்

கட்டிக்கொள்கிறார்கள். இஷ்டப் பட்டபொழுது அத் துணியை அவிழ்த்துவிட அவர்களுக்கு இயலும்.

ஆனால் மற்ற ஜீவர்களுக்கோ, கண்ணை மூடியிருக்கிற அகங்காரத் துணி பின்பக்கம் தங்களால் அவிழ்க்க முடியாதபடி இறுகக் கட்டி வைத்தது போன்றது.

உதய சூரியன் போன்றவர் அவதாரமூர்த்தி. உதயசூரியனைக் கண்குளிரப் பார்க்கலாம். அவ்வேளையில் கண்ணைப் பறிக்கும் பேரொளி சூரியனிடத்தில் புலனாவதில்லை. அதே விதத்தில், அவதார புருஷர் தமது ஈசுவர மகிமைகளையெல்லாம் ஒடுக்கி வைத்துவிட்டு, பக்தர்களுக்கேற்ற இன்னியல்புடன் இலங்குகின்றார்.

தேனீயிடமிருந்து அவதூதர் அரிய பாடம் ஒன்றைக் கற்றுக்கொண்டார். ஈ சேகரித்து வைத்திருந்த தேனையெல்லாம், உலகத்தவர் வந்து அபகரித்துக் கொண்டு போய்விட்டனர். அதைப் பார்த்த அவதூதர், துறவி ஒருவன் நாளைக்கென்று எதையும் தேடி வைக்கலாகாது என்னும் பாடத்தைக் கற்றுக்கொண்டார். அவர்கள் இறைவனையே சார்ந்திருக்க வேண்டும்.

அவதூதருக்கு உபகுருக்கள் பலபேர் இருந்தனர். பருந்து ஒன்றினிடமிருந்து அரிய பாடம் ஒன்றை அவர் கற்றுக்கொண்டார்.

நதிக்கரையில் அகப்பட்ட மீன் ஒன்றைக் கௌவிக்கொண்டு, பருந்து மேலே பறந்தது. நூற்றுக்கணக்கான காக்கைகள், அது சென்ற இடத்துக்கெல்லாம் பின்பற்றி அதை உபத்திரவப் படுத்தின.

கீழும்மேலுமாகப்பறந்தோடிய பருந்தின் அலகிலிருந்து, மீன் நழுவிக் கீழே விழுந்தது. அத்தனை காக்கைகளும் பருந்தை விட்டுவிட்டு மீனின்மீது பாய்ந்தன. பருந்தோ அமைதியுற்று ஒரு மரக்கிளையில் உட்கார்ந்திருந்தது.

அதைப்பார்த்த அவதூதர், "நீ எனக்கு குரு.' உலகப் பொருள்களை விட்டொழிக்கின்றவனுக்கு, நீ இப்பொழுது அடைந்துள்ள நிம்மதி கிட்டுகிறது" என்றார்.

இறைவனுடைய திருநாமத்தைக் கேட்ட மாத்திரத்தில், உன் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகுகிறது; மயிர்க்கூச்செடுக்கிறது. அத்தகைய மன் நிலை உனக்கு வரும்பொழுது, நீ சந்தியா வந்தனம் போன்ற நித்திய கர்மங்களை விட்டுவிடலாம். அது மட்டுமல்ல, கர்மங்கள் யாவும் தாமாக பக்தனுடைய மனத்தினின்று நழுவிப் போய்விடுகின்றன.

பக்தன் ஒருவனுக்கு ஆசை சிறிதேனும் இருக்கலாகாது. யத்ருச்சா லாப சந்துஷ்டன் என்று அவனைப்பற்றிக் கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. தற்செயலாய்க் கிடைப்பதைக் கொண்டு திருப்தியடைந்திருப்பவன் என்பது அதன் பொருள்.

மக்களுள் சிலர், வேறு மதத்தைச் சேர்ந்த பக்தர்களிடம் பழக மறுக்கின்றனர். ஆனால் உலக வாழ்வில் மூழ்கிக்கிடப்பவர்களோடு பழகுவதற்கு அவர்களுக்குத் தடையில்லை. மத வேற்றுமையிருந்தாலும், பக்தர்களோடு பழகுவது மேல். உலக பந்தத்தில் உழல்பவர்களோடு பழகுவது ஒவ்வாது.

இவ்வாழ்வு வாழுகின்றவர்களுக்கு விமோசனமே இல்லையா?

விமோசனம் அவசியம் உண்டு. அதன் பொருட்டு அவர்கள் கொஞ்சகாலம் ஏகாந்த வாசம் செய்து, பக்தி சாதனங்கள் புரிய வேண்டும்.

கேப்டன் விசுவநாதரோடு பரமஹம்ஸரைப் பார்க்க வந்த கன்னிகை ஒருத்தி, பக்தி பரவசத்துடன் பாடல்கள் சில பாடினாள். அதைக்கேட்டவர்கள் மனமுருகி பக்திக் கண்ணீர் சிந்தினர்.

பின்பு, "அவள் ஏன் இன்னும் மணம் புரிந்துகொள்ளவில்லை?" யென்று கேட்டார்கள்.

"சர்வேசுவரனுக்கு நான் பணிப்பெண். வேறு யாருக்கும் நான் ஆட்படேன்" என்றாள் அவள். இது மிகச் சிறந்த மனப்பான்மை.

வேதங்கள், சாஸ்திரங்கள், இதிகாசங்கள், புராணங்கள், தந்த்ர சாஸ்திரங்கள் ஆகிய இவை யாவும், சச்சிதானந்தம் என்னும் ஒரு பொருளைத்தான் நாடுகின்றன. அந்த சச்சிதானத்தை வேதங்கள் பிரம்மம் என்கின்றன. தந்த்ர சாஸ்திரங்கள் சச்சிதானந்த சிவம் என்கின்றன. பாகவத புராணம் சச்சிதானந்த கிருஷ்ணன் என்கின்றது.

சமயங்கள் அனைத்தும் ஒரே மெய்ப் பொருளுக்கு வழிகாட்டுகின்றன. ஆதலால், சாதகன் ஒருவன், பிறருடைய மதத்தையோ கொள்கையையோ அலட்சியப்படுத்தலாகாது.

லௌகிக நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள ஒருவனுக்கு அழைப்பு இல்லாவிட்டால், அங்கே போக வேண்டியதில்லை. ஆனால் ஈசுவர வழிபாடு நிகழ்கிற இடம் ஒன்றுக்கு, அழைப்பில்லாது பக்தன் ஒருவன் போகவேண்டும்.

வறுமையையும் பிணியையும் பார்க்கிற பணக்காரன் ஒருவன், தன்னிடமுள்ள பணத்தையெடுத்து அப்பிணியைத் துடைத்தல் பொருட்டு வழங்குகிறான்.

அப்படி வழங்குதற்கிடையில் "ஈசா, எல்லாம் உன் செயல். என்னால் ஆவதென்ன?" என்று உள்ளூற அவன் உணருகிறான்.

சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய கிருத்தியங்களைக் கடவுள் ஓயாது செய்து வருகிறார். அவருடைய சம்ஹாரத் தொழிலை யார்தான் நிறுத்திவிட முடியும்? ஆதலால் மரணத்தைக் குறித்து வருந்துவதால் ஆவதென்ன? மரணம் தவிர்க்க முடியாதது.

மரணத்தைக் குறித்துத் தியானம் பண்ணுவது, சாதகன் ஒருவனுக்குப் பெரு நன்மை விளைவிக்கும்.

மரணம் எப்பொழுது வேண்டுமானாலும் மனிதனை வந்து தாக்கும். அதற்கு முற்றிலும் ஆயத்தமாயிருப்பவனுக்கு, மரணபயமோ துன்பமோ இல்லை.

பொன் ஒன்றை எங்கு போட்டாலும் அதுபொன்னாகவே இருக்கிறது. ஈசுவரானுபூதி அடையப்பெற்றவன் பொன் போன்றவன். உலகின் சூழ்நிலை அவனைக் கெடுத்துவிடாது.

அறை ஒன்றனுள் பொக்கிஷம் வைக்கப் பட்டிருக்கிறது. அதைப் பற்றி வெறுமே வெளியில் நின்றுகொண்டு சிந்தித்துக் கொண்டிருந்தால் போதாது.

திறவுகோலைத் தேடியெடுத்துப் பூட்டைத் திறந்து, உள்ளே வைக்கப்பட்டிருக்கும் பொருளைத் தேடியெடுக்க வேண்டும். அது போன்று சரியாக ஆத்ம சாதனங்கள் செய்கின்றவனுக்கே, தன் அகத்தினுள்ளிருக்கும் தெய்விகப் பெற்றிகளெல்லாம் உள்ளபடி விளங்கும்.

ஒருவன் ஆத்ம சாதனங்களை ஆயுட்காலமெல்லாம் செய்து கொண்டிருக்க வேண்டியது அவசியமா?

இல்லை. உள்ளிருக்கும் பொருளை அறியும்வரையில் அச் சாதனங்களைச் செய்யவேண்டும். அதை அறிந்தான பிறகு, வாழ்க்கை வேறொருவிதமாக மாறி விடுகிறது.

ஞானி ஒருவன் ஸோஹம்- நான் பிரம்மம்-என்கிறான். ஆனால் பக்தனோ, பிரபஞ்சம் யாவும் பகவானுடைய மகிமை என்கிறான். செல்வமில்லாத ஒருவனை யார்தான் பொருட்படுத்துவார்? மகிமைகள் யாவையும் பகவான் உடைத்திருப்பதால், அவர் போற்றுதற்குரிய பொருள் ஆகிறார்.

ஏகாதசியன்று ஒருவன் உபவாசம் இருக்கவேண்டும். அதனால் சித்த சுத்தி உண்டாகிறது. கடவுள் பக்தி அதிகரிக்கிறது.

வெள்ளைப் பூண்டு வைத்திருந்த பாத்திரத்தை எவ்வளவு கழுவினாலும், வெள்ளைப் பூண்டு வாசம் அதை விட்டுபோகாது. உலகத்தவர் மனது அது போன்றது. உலக விஷயம் அவர்கள் உள்ளத்தை விட்டு ஒருபொழுதும் போகாது.

ஆனால், வெள்ளைப்பூண்டு வைத்திருந்த பாத்திரத்தை தீயில் பழுக்கச் சுட்டெடுத்தால், அந்த நாற்றம் போய்விடுகிறது. அங்ஙனம் உலகத்தவன் ஒருவன் தவத்தால் தன் உள்ளத்தைத் தூயதாக்கலாம்.

# வீர சைவர்களும் வீர வைஷ்ணவர்களும்



ஜகத்குரு
ஸ்ரீகாமகோடி ஆச்சார்ய
ஸ்வாமிகள்

நமது வேத சாஸ்திரங்களை நம்பிக் கர்மானுஷ்டானங்களைச்செய்கிறவர்களில், உபாஸகர்கள் இரண்டு வகைப்படுவார்கள். அவர்கள் சைவர்களும் வைஷ்ணவர்களும்.

ஆலயங்களும் சிவாலயங்கள் என்றும், விஷ்ணு ஆலயங்கள் என்றும் ஏற்பட்டிருக்கின்றன. இவை தவிர ஸுப்ரமண்ய ஆலயங்கள், ஸப்தமாதா ஆலயங்கள் முதலியனவு முண்டு. ஆனால் சிவாலயங்களும், விஷ்ணு ஆலயங்களுமே அதிகம்.

தென் தேசத்தில் பிடாரி கோயில் என்று ஒன்றுண்டு. அது துர்தேவதையின் கோயில் என்று சிலர் தப்பாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அம்பாளுடைய ஸஹஸ்ர நாமத்தில் 'பட்டாரிகா' என்று ஒரு நாமா சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பெயர்தான் படாரிகை என்று மருவிப் பிறகு பிடாரியாகிவிட்டது.

சில தாமிர சாஸனங்கள் ஸம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய இரண்டு பாஷைகளிலு மிருக்கின்றன. வடமொழிச் சாஸனத்தில் 'பட்டாரிகாமான்யம்' என்றும், தமிழ்ச் சாஸனத்தில் 'படாரி மான்யம்' என்றும் காணப்படுகிறது. ஆகையால் 'பட்டாரிகா' என்ற சொல் பிடாரியாக மாறிவிட்டதென்பது நிச்சயம்.

இப்படிப் பல கோயில்கள் இருப்பினும், சிவன் கோயில்களும் விஷ்ணு கோயில்களுமே முக்கிய மானவைகளாக இருக்கின்றன. அயல் தேசத்தான் ஒருவன் வந்து பார்த்தால், இரண்டு மதஸ்தர்கள் இருப்பதாகவே சொல்லக் கூடும்.

சைவர்கள் வைஷ்ணவர்கள் என்பவர்களில் பூரண சைவர்கள், பூரண வைஷ்ணவர்கள் சிலர் இருக்கிறார்கள். வீரசைவர்கள் (அதாவது, லிங்காயத்துக்கள்) பூரண சைவர்கள்.

ராமானுஜ ஸம்பிரதாயத்தை அனுஷ்டிப்பவர்களில், ஸாதாரண வைஷ்ணவர்கள் சிலர் இருவகைக் கோயில்களுக்கும் போகிறவர்களாக இருக்கலாமாயினும், அவர்களுடைய ஆசார்ய புருஷர்கள் சிவாலயத்திற்குப் போகவேண்டியதில்லையென்றும், சிவபுராணங்களைக் கேட்கவேண்டியதில்லை யென்றும் சொல்லுவார்கள்.

வீர சைவர்கள் விஷ்ணுகோயிலுக்குப் போகவேண்டியதில்லை யென்றும், விஷ்ணு புராணங்களைக் கேட்க வேண்டியதில்லை யென்றும் சொல்லுவார்கள்.

இவ்விருவருக்கும் மத்தியிலுள்ள நாம்—அதாவது ஸ்மார்த்தப் பிராமணர்கள், பிராமணரல்லாதவர்கள் எல்லோரும் இரண்டு பக்தியும் செய்கிறோம்.

வீர சைவர்கள் வீர வைஷ்ணவர்கள் தவிர, மற்றவர்கள் எல்லோருக்கும் இரண்டும் பொது. விபூதி தாரணம்செய்துகொண்டு ஸ்ரீராமநவமி, கோகுலாஷ்டமி, ராதா கல்யாணம் முதலியன சிலர் கொண்டாடுவார்கள். விபூதி ருத்திராக்ஷம் தரித்திருப்பினும் அவர்களுக்கு விஷ்ணு பக்தி அதிகம். விபூதி ருத்திராக்ஷம் பரம்பரைச் சின்னம். அவர்களுடைய சொந்த பக்தி விஷ்ணு பக்தி.

சிலர் ஊர்த்துவபுண்டரம் போட்டுக்கொள்வார்கள். ஆனால் சிவபக்தி செய்வார்கள். இவைகளைத் தவிர கர்மானுஷ்டானங்கள் பொது.

“ஏன் சிவாலயங்களுக்குப் போவதில்லை?” என்று வீர வைஷ்ணவர்களைக் கேட்டால், அவர்கள் சொல்லும் ஆக்ஷேபம் இது; “பகவான் ஒருவர்தானே? இரண்டு பெயர்களல்ல. ஒரு பரமாத்மாதான் உண்டு. மற்ற தேவதைகள் பிரும்மா, ருத்திரன் உள்பட, ஸூரிய சந்திரர்கள் மாதிரி ஜீவாத்மாக்கள்தான். நாம் கடைத்தேற பரமாத்மாவே வேண்டும். அவர் விஷ்ணுதான். ஆகையால் விஷ்ணுவின் ஆலயத்திற்கே போக வேண்டும்”.

லிங்காயத்துகளும் அப்படியே சொல்லுகிறார்கள். சிவன் பரமாத்மா, விஷ்ணு ஜீவாத்மா என்கிறார்கள்.

இருவரும் நம்மைப் பரிகாஸம் செய்கிறார்கள். நமக்குத் தீவிர மான அபிப்பிராயமில்லை என்கிறார்கள். வேறு சிலர், "பரம சிவன் ஜீவாத்மாவாக இருப்பினும், நம்மைக் காட்டிலும் பெரியவர் தானே? அவருடைய கோயிலுக்குப் போக வேண்டாமா?" என்றால்,

"ஜீவ ஈசுவர ஸம்பந்தம் நாயக நாயிகா ஸம்பந்தம் போன்றது. ஆகையால் சிவன் கோயிலுக்குப் போகக்கூடாது!" என்கிறார்கள்.

அதாவது, "ஸ்திரீகள் பர்த்தாவிடத்தில் ஏகாச்ரசித்தமுடையவர்களாக இருக்க வேண்டியது போல், விஷ்ணுபக்தி செய்ய வேண்டும். வேறு வீட்டிற்குப் பதிவிரதை போனால், பாதிவிரத்தியத்திற்கு லோப மேற்பட்டு விடும். பர புருஷனைப் பார்க்கக் கூடாததுபோல், வேறு தெய்வத்தைக் காணுமுன் கதவை மூடிக் கொண்டு போய்விட வேண்டும்" என்கிறார்கள். வீரசைவர்களும் இப்படியே நாயக நாயிகா வாதத்தைச் சொல்லுகிறார்கள்.

பரமாத்மா இரண்டல்லவென்பது நிச்சயம். இரண்டிருப்பதாக வைத்துக்கொண்டாலும், பதிவிரதையைப் போல் வேறு தெய்வத்தைப் பார்க்கக்கூடாது, என்கிறார்கள்.

ஆனால் நாம் இரண்டு கோயில்களுக்கும் போகிறோம். நம்முள் பலர், அவர்களைக் காட்டிலும் அதிகமாக விஷ்ணு பக்தி செய்கிறார்கள். பிராம்மணர்களை மாத்திரம் நான் சொல்லவில்லை. எல்லா ஜாதிகளிலும் பரம விஷ்ணு பக்தர்கள் இருக்கிறார்கள். ஆனால் பூசுவது வெண்ணீறு!

மேலே நான் சொன்ன வாதங்களைச் சொல்லிச் சொல்லியே, ஒவ்வொரு ஆசார்யர்கள் ஏற்பட்ட காலங்களில் அநேகரைத் தங்களுடைய வழிக்குத் திருப்பினார்கள். அநாதியாக வந்துள்ள உபாஸனை சரியா, அவர்கள் சொல்லுவது சரியா என்று யோசிப்போமானால், அது அவர்களுக்குச் சரி, இது நமக்குச் சரி.

அதெப்படி என்று கேட்கலாம்.

பரமாத்மா இரண்டென்று வைத்துக்கொள்ளுவதால், ஒருவரை ஜீவாத்மாவாகச் செய்ய வேண்டியிருக்கிறது. வெவ்வேறு மூர்த்தி என்று வைத்துக்கொள்ளுவதால, இந்தக் கஷ்டம் நேருகிறது. ஆனால், "இரண்டு பெயர்களும் ஒருவரே, வேஷம் மாத்திரம் வெவ்வேறு" என்றுதான் சாஸ்திரம் சொல்லுகிறது.

சங்கர நயினார் கோயில் போன்ற சில ஊர்களில், இரண்டு மூர்த்தியையும் ஒரே உருவத்தில் காண்கிறோம்.

ஒரு உதாஹரணம் சொல்லுகிறேன். ஒருவருக்குக் கிருபா சங்கரர் என்று பெயர் வைத்துக்

கொள்ளுவோம். அவ்ரைக் கிருபர் என்றும் கூப்பிடுவதுண்டு. கிருபர் கிருபாசங்கருடன் சண்டை போட்டார் என்பது அஸந்தர்ப்பம்.

பரமாத்மா இருவராக இருந்தால், அவர்கள் சொல்லுவது தான் சரி.

வஸ்து ஒன்றே யாகையால்—இரண்டல்ல வாகையால்—பாதி விரத்தியத்திற்கு தோஷ மேற்படாது. பர்த்தா ஒரு ஸமயம் ஒரு வேஷமும், இன்னொரு ஸமயம் இன்னொரு வேஷமும் போட்டுக்கொண்டால், இரண்டு வேஷங்களையுடைய அவரிடத்தில் பக்தியுள்ள ஸ்திரீக்கு தோஷமுண்டா?

அப்படியானல் ராமபக்தி செய்கிறவர்கள் கிருஷ்ணன் கோவிலுக்குப் போகக்கூடாது. ஏனெனில் பாதி விரத்தியத்திற்கு தோஷமேற்பட்டுவிடும். பார்த்தஸாரதி கோயிலுக்குப் போய்விட்டுக் கேசவப் பெருமாள் கோயிலுக்குப் போகக்கூடாது. இரண்டிடங்களிலும் பெயர் வேறு, ரூபம் வேறு. நாம் அப்படி நினைக்காமல் ஒரே ஸ்வாமியாக நினைத்து எல்லாக் கோயில்களுக்கும் போகிறோம்.

மூர்த்தி இரண்டானல் பாதி விரத்தியத்திற்கு தோஷம் நிச்சயம். நமக்கு ஏற்பட்ட தர்மத்திலிருந்து மாறுவதே பெரிய பாதி விரத்திய லோபம்.

அநாதியான மார்க்கத்தில் போவதே பாதி விரத்தியம். ஆகையால் சிவாலயத்துக்குப் போனல், பாதிவிரத்திய லோபம் வருமென்பது பிசகு.

சாஸ்திரங்கள் "ஒரே பரமாத்மாதான், சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்காக, மூன்று உருவங்களை எடுத்திருக்கிறது" என்று சொல்லுகின்றன.

லோகத்தை உண்டாக்குவது ஒரு காரியம். பிறகு பரிபாலனம் செய்வது ஒரு காரியம். பிறகு ஸம்ஸாரம் செய்வது ஒரு காரியம்.

நாசம் செய்வது அக்கிரமமென்று தோன்றலாம். உண்டு பண்ணுவதுதான் அக்கிரமமென்று சொல்ல முடியும். நாம் அனுபவிப்பது கஷ்டம். நம்மை எதற்காக உண்டாக்கினர் என்று தோன்றுகிறது. கஷ்டம் அதிகமாகும்போது, தன்னைத்தானே மனிதன் நாசஞ் செய்துகொள்ளுகிறன். இருப்பதைக் காட்டிலும் நாசமே நல்லதென்று நினைக்கிறன்.

நாம் எல்லோரும் சாகாமலிருந்துவிடின், இருநூறு வருஷங்களில் என்னவாகும்? ஜனஸங்கியை பெருகி உட்கார இடமிராது, ஆஹாரம் அகப்படாது. ஆகையால் நாசம் அவசியமான காரியமாக இருக்கிறது.

விருத்தர்கள், ரோகிகள் முதலியவர்கள் மரணத்தை விரும்பு

கிறார்கள். அவர்களுக்கு நாசம் அனுகூலமான காரியமென்று தோன்றுகிறது. ஆகையால் நாசம் அவசியமானதுதான்.

ஒரே பரமாத்மா முத்தொழில்களைச் செய்ய மூன்று ரூபமெடுக்கிறார். பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்று அந்த ரூபங்களுக்குப் பெயர்.

அந்தந்தக் காரியத்துக்குத்தக்க குணத்தை, அவர் கிரஹித்துக் கொள்கிறார். நம்முடைய வீட்டிற்கு ஒரு அதிதி வருவாராயின் அவரை உபசரிக்கிறோம். 'வாருங்கள், உட்காருங்கள்' என்று சொல்லுகிறோம். நாம் கோபிஷ்டராக இருப்பினும், அந்த ஸமயத்தில் ஸத்வ குணத்தை எடுத்துக்கொள்ளுகிறோம்.

நம்முடைய குழந்தைகள் படிக்கும்படி செய்யவேண்டியபோது "வாருங்கள், உட்காருங்கள்" என்று சொல்ல முடியாது. அந்த இடத்தில் கெடி இருக்க வேண்டும். அதற்கு ரஜோ குணம் அவசியம்.

நம்மூரில் பல ஜனங்கள் இருக்கிறார்கள். புலி ஒன்று கூட்டிலிருந்து வெளிப்பட்டு விட்டது. அப்பொழுது தமோகுணத்தை அவலம்பித்துக்கொண்டு, குரூரமான காரியத்தைச் செய்யவேண்டும். ஆகையால் காரியத்துக்குத் தக்க குணம் அவசியமாக இருக்கிறது.

சிருஷ்டி ரஜோகுணம், ஸ்திதி (பரிபாலித்தல்) ஸத்வகுணம், ஸம்ஹாரம் (நாசம்) தமோ குணம். இம் மூன்றும் சேர்ந்தது மாயை.

இந்தக் குணங்கள் பரமாத்மாவின் ஸ்பாவமல்ல. காரியங்களின் பொருட்டு அவர் அவைகளைக் கிரஹித்துக் கொள்ளுகிறார். ஈசுவரன் நிர்க்குணமானவர்.

குணங்கள் மாயை. மா என்ற சொல்லுக்கு இல்லை என்று அர்த்தம். யா என்றால் எவள் என்று அர்த்தம். ஆகையால் மாயா என்றால், 'எவள் இல்லையோ அவள்" என்பது அர்த்தம். வாஸ்தவத்தில் இல்லாததை இருப்பதாக அவர் காட்டுகிறார்.

பிரம்மா ரஜோ குணத்தைக் கிரஹித்த பரமாத்மா, விஷ்ணு ஸத்வகுணத்தைக் கிரஹித்த பரமாதமா, ருத்திரன் தமோ குணத்தைக் கிரஹித்த பரமாத்மா.

ஆனால் 100-க்கு 75-வீதம் சிவன் கோயில்கள் இருக்கின்றன. 100-க்கு 25-வீதம் விஷ்ணு கோயில்கள் இருக்கின்றன. ஜனங்களிலும் 100-க்கு 75 பெயர்கள் சிவபக்தி செய்கிறவர்கள். பாக்கி கால் பாக ஜனங்களில் எத்தனையோ பேதங்கள் உண்டு. எல்லோரும் சேர்ந்து 100-க்கு 25 வீதமே இருக்கிறார்கள். உபா

ஸகர்கள் கணக்குப்படி கோயில்களுமிருக்கின்றன.

ராமாநுஜ ஸம்பிரதாயம் ஏற்பட்டதற்குமுன், விஷ்ணுகோயில்கள் ஏற்பட்டவை. அக்காலத்தில் ஸ்மார்த்தர்கள்தான் விபூதி தரித்துக்கொண்டு பூஜை செய்து வந்தார்கள். இப்பொழுதும் ஸ்ரீரங்கத்தில் காணியாளர் என்று ஒரு வகைப் பிராம்மணர்கள் இருக்கிறார்கள். விஷ்ணு கோயிலில் அவர்கள் காணியாட்சி பாத்தியம் உடையவர்கள். திருவரங்கத்து அமுதனார் என்று இப்பொழுதும் ஒரு குடும்பத்தார் இருக்கிறார்கள் ராமாநுஜஸம்பிரதாய மேற்பட்ட பிறகு, அவர்கள் நாமம் போட்டுக்கொண்டார்கள். ஆனால் ஸ்மார்த்தர்களே. வருஷத்தில் ஒருநாள் அவர்களைக் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு போய் ஸகல மரியாதைகளையும் செய்து வீட்டிற்குக் கொண்டுவந்து விடுகிறார்கள்.

விஷ்ணுபக்தி செய்வோருக்கு, அநாதியாக ஏற்பட்ட சின்னம் கோபி சந்தனத்தால் ஊர்த்துவ புண்டரம்போட்டுக்கொள்ளுதல், தேசத்தில் அத்துவைத ஸம்பிரதாயமும் சிவ ஸம்பிரதாயமுமே அதிகம். கிராமங்களில் விஷ்ணு ஆலயங்களை ஸமார்த்தர்களே பரிபாலித்து வருகிறார்கள்.

# திருக்கோயில் வழிபாடு



ஸ்ரீ காமகோடி பீடம்
ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்

சமுதாயம் அனைத்தின் பொது நலனுக்காக உள்ளது கோயில் வழிபாடு. எனவே, கோயில்கள் நல்ல முறையில் பராமரிக்கப்படுவதற்கும், கோயில் சேவையில் ஈடுபட்டுள்ளவர்கள் நல்ல முறையில் கவனிக்கப்படுவதற்கும் உறுதி செய்ய வேண்டிய பொறுப்பு சமுதாயம் அனைத்துக்கும் உண்டு.

தாங்களாகவே தியானத்தில் ஈடுபடக்கூடிய மகாத்மாக்களுக்கு கோயில்கள் அவசியமில்லை. ஆனால் அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளில் அலைக்கழிக்கப்படும் சாதாரண மக்களுக்கு, கோயில்கள் அவசியம்.

இல்லத்திலும் கோயிலிலும் பூஜை செய்வதற்கு ஹிந்து சமயம் அனுமதி தருகிறது. இல்லத்தில் செய்யப்படுகின்ற பூஜை தனி மனிதனின் நலனுக்கானது. கோயிலில் நடத்தப்படும் பூஜை சமுதாயத்தின் நலனுக்கானது.

கோயில்களின் நிர்வாகத்தை அரசினரும், அறநிலையத் துறையினரும் கவனித்துக்கொள்ளக் கூடும். கோயில்களில் பூஜைகள் நல்ல முறையில் நடப்பதற்கும், பூஜை புரிபவர்கள் பற்றுக்குறை இல்லாமல் வாழ்வதற்கும், கோயில்களில் பொது மக்கள் சொந்த அக்கறைகொள்ள வேண்டும்.

கோயில்களின் தெய்வீகத் தன்மையை பல்வேறு மந்திரங்களும், சடங்குகளுமே பேணிக் காக்கின்றன. எனவே மந்திரங்கள், சடங்குகள் சம்பந்தமாகச் சிறிதும் விட்டுக்கொடுக்க இயலாது. இந்தப் புனிதப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ள தந்திரிகள், இதில் உறுதியாக இருக்க வேண்டும்.

கோயில்களில் பொதுமக்கள் கடுமையான கட்டுப்பாட்டைப் பின்பற்ற வேண்டும். பூஜைகளை எல்லோரும் செய்ய முடியாது என்பதையும், அதற்கான தகுதியும் திறமையும் உடையவர்கள் மட்டுமே பூஜைகளைச் செய்யமுடியும் என்பதையும், பொதுமக்கள் புரிந்துகொள்ள வேண்டும்.

கோயிலுக்குச் செல்லும்போது உடைகள் விஷயத்திலும் கட்டுப்பாட்டை பின்பற்ற வேண்டும். சாதாரண வாழ்க்கையில்கூட பலருக்கு அவரவர் வேலைகளையொட்டி உடைகள் உள்ளன. போலீஸாரை இதற்கு ஓர் உதாரணமாக சொல்லலாம். அதேபோல, கோயிலில் வழிபாடு செய்பவர்களும் அதற்கென குறிக்கப்படும் விதத்தில உடைகளை அணிந்து செல்ல வேண்டும்.

கோயில் உள்ள பகுதியைச் சேர்ந்த மக்கள் சந்திக்கும் பொது இடமாக, கோயில் விளங்குகிறது. அவ்வாறு சந்திக்கும் மக்களிடையே ஒற்றுமை வளருகிறது. வழிபாடு செய்பவர்கள் காணிக்கைகளைச் செலுத்துகிறார்கள். இந்த வகையில் தியாக உணர்வையும் கோயில்கள் வளர்க்கின்றன.



# ஸ்ரீ சாந்தானந்தர் அருள்வாக்கு



நிராசையை ஒத்த செல்வம் தேவர் உலகத்திலும் இல்லையென் பதை, நீ மறந்து விடாதே.

ஆசைகள் அற்றவனே பிறவி அற்றவனுவான்.

உன்னை வஞ்சித்துப் பிறவியின் கண்ணே தள்ளுவது, உன்னுள்ளிருக்கும் ஆசையாகும். நீ ஆசையை ஒழிப்பதற்கு ஆசைப்படுவதே அறநெறியாகும்.

உன்னை இறைவன் பகுத்தறிவுள்ள மனிதனைப் படைத்தது எதற்காகத் தெரியுமா? ஆசை எனும் பெரிய கொடிய துன்பத்திலிருந்து நீ இம்மையில் விடுதலை அடையவே; மறவாதே!

மனிதனுக்குத் துன்பங்களுள் எல்லாம் பெரும் துன்பம் தருவது பேராசையாகும்.

கோடானு கோடி பிறவிகளை நீ எடுப்பினும், உனக்குள்ள ஆசை ஒருக்காலும் நிரம்பிவிடப் போவதில்லை. அப்படியிருக்க, பெரும் துன்பத்தைத் தரும் ஆசையை நீ ஏன் உனக்குள் வைத்துக் கொண்டிருக்கிறுய்?

இன்பம் வரும்பொழுது சந்தோஷப் படுகிறுய். துன்பம் வரும்பொழுது விதியை நொந்து கொள்கிறுயே? இரண்டும் வியின் விளையாட்டென்பதை மறவாதே.

இன்பத்தையும் துன்பத்தையும் விதியின் பிரஸாதங்களாக ஏற்று, வாழ்க்கையைக் கவலையின்றி நடத்துபவனே உண்மை அறிவுள்ள மனிதனுவான்.

கடவுளை நம்பினவன் இன்பத்திலும் துன்பத்திலும் கடவுளையே

கண்டுய்வன். எதற்கும் கவலைப் பட மாட்டான்.

“ஊழ்வினையை வெல்வேன்!” என்று மார்தட்டிச் செல்லும் வீரனின் முன்னால், அவனையும் அறியாது வினைப்பயன் அவன் முன்னே வந்து தடுத்து நிற்கு மென்பதை மறவாதே!

காட்சிக்கு எளியவனாய், கடுஞ் சொற்கள் இல்லாதவனாய் நீ இருப்பாயேல், உன்னை அனைவரும் பாராட்டிப் புகழ்வார்கள்.

கற்றவர்களே நன்மக்கள்; கல் லாதார் பகுத்தறிவற்ற விலங்கு கட்கு சமமாவர்.

உடல் வலிமை உண்டாக்கும் உணவைத் தேடுவதைவிட, நல் லறிவுக்கு உணவான கேள்வியைத் தேடுபவனே மேன்மையடை வான்.

உன் உள்ளத்தைத் தீமையி லிருந்து நீக்கி, அஞ்சவேண்டிய தற்கு அஞ்சி நடந்து கொள்வ துடன், நற்பணியின் கண் அறி வைச் செலுத்துவதே உனக்கு நலத்தைக் கொடுக்கும்.

நல்லறிவு பெருக வேண்டுமா? அப்படியானால் கல்வியைப் பெருக்கு. அழிவில்லாத செல்வம் கல்வி ஒன்றே யாகும்.

கல்வியில்லாதவன் எதைப் பற்றியும் பேசாதிருப்பதே, அவனுக்கு நன்மையைத் தரும்.

படிக்காதவன் களர் நிலத் திற்கு ஒப்பாவான்.

வயிற்றிற்கு உணவைத்தேடு வது போல, அறிவிற்குரிய உண வான கேள்வியை மிகுதியாகத் தேடுபவனே மனிதனாவான்.

நீ கற்றோர் சொல்லைக்கேட்டு விடுவாயானால், தேவரோடு உன் னையும் ஒப்பிட்டுப் பேசுவார்கள்.

ஒழுக்கமுடையார் வாய்ச் சொல் ஒன்றே, நிறைந்த பெரு மையைத் தரும்.

நல்ல அருள்வாக்கைக் கேளாத காது, செவிடேயாகும்.

ஸத் சங்கத்தின் சுவையினை இம்மையில் அறியாதவன், உயி ரற்ற சடலத்திற்கு ஒப்பானவன்.

நல்லறிவுள்ள மனிதன் என்று தன்னைத்தானே மெச்சிக்கொள்ளு பவன், தன் உள்ளத்தைப் புலன் களின் வழியே செல்லவிடாமல் தடுத்தி நிறுத்தி மேன்மையடை யாவிட்டால், அவன் புல்லறி வுடையவனே ஆவான்!

பகுத்தறிவு இருக்கிறதென்று சொல்லிக்கொள்ளும் மனிதன், எவரிடம் எதைக் கேட்பினும் அந்தப் பொருளிலுள்ள உண்மை யான மெய்ப்பொருளையே கண்டு உய்யவேண்டும்.

பிறர் புரிந்து கொள்ளும்படி பேசுவதுதான் உனக்குப் பெருமை. மூக்கை நேராகப் பிடிப்பதைவிட்டு ஏன் தலையைச் சுற்றிப் பிடிக்கிறாய்?

உனக்கு வரும் அழிவை இம்மை யில் வராமல் தடுத்துக்கொள் ளவே, கடவுள் நல்லறிவை உனக் குத் தந்திருக்கிறார் என்பதை மறவாதே!



# பிரபுவின் தந்திரம்



ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார்

உலகத்திலே எல்லாம் இரட்டை இரட்டைகளாகவே அமைந்திருக்கின்றன. இன்பம் துன்பம்; வெய்யில் நிழல்; ஆக்கம் நீக்கம்; வெப்பம் தட்பம்; போக்கு வரவு; இறப்பு பிறப்பு; நினைப்பு மறப்பு; இரவு பகல்; நன்மை தீமை; புண்ணியம் பாவம்; புகழ் இகழ்; மதிப்பு அவமதிப்பு; இவ்வாறு எல்லாம் இரட்டை இரட்டையாகவே அமைந்துள்ளன. இந்த இரட்டை தோன்றுமல் இருப்பது அருள் வாழ்வு.

இருள் வாழ்வில் இவை தோன்றும். அதனுல் விளைகின்ற அல்லலும் பல.

ஒரு பெரிய கோடீச்சுரர். அவருடைய மகன், பரம காலிகளாகிய குடியன், தடியன், வெறியன், மடையன், அசடன்களுடன் கூடித் திரிகின்ருன்; அந்தக் காலிகள் சொன்னபடி கேட்கின்ருன். தனது பெருந்தன்மையை நினைக்கவில்லை. குடியன், தடியன்களுக்கு அடிமையாகி, அவர்கள் கைப் பம்பரமாகச் சுழல்கின்ருன்.

தந்தை அது கண்டு வருந்துகின்ருர். தன்னிடமுள்ள எல்லையற்ற நிதியை நியாய முறையில் பெறத் தெரியாது, ஒரு ரூபாய்க்குப் பலரிடம் போய்த் தன் மகன் தொங்குகின்றதைக் கண்டு இரங்கினுர். அவர் ஒரு தந்திரம் புரிந்தார். அது என்ன தந்திரம் தெரியுமா? அழகான தந்திரம், அற்புதமான தந்திரம்.

ஒரு நாள் மெல்ல மகனை அடக்கியாளுகின்ற அந்தக் குடியனையும் தடியனையும் வெறியனையும் மடையனையும் தனியே அழைத்தார். அவர்கள் பயந்தே போனுர்கள். இவர் எதிரிலேயே வருவதற்குத் தகுதியற்றவர்கள்; மிகக் கேவலமானவர்கள்.

"மிகவுயர்ந்த நிலையில் உள்ள இவர் நம்மை ஏன் அழைக்கின்

ரூர்?'' என்று கருதினார்கள். "ஒரு வேளை அவருடைய மகனை நாம் கெடுக்கின்றோம் என்ற சினத் தால், நம்மைக் கட்டி வைத்து அடிக்கப் போகின்றாரோ? என்ன தண்டனை தருவாரோ? இன் றைக்கு நமக்கு என்ன கெட்ட காலமோ?'' என்றெல்லாம் எண்ணி நடுங்கிப் போனார்கள். கால் நடுங்க கை நடுங்க, மெல்ல வந்து அக்கோடீஸ்வரப் பிரபு வுக்கு முன்னால் நின்றார்கள்.

அவர் அவர்களைக் குளிர்ச்சி யாகப் பார்த்தருளினார். அவரு டைய அருட்பார்வை அவர்களு டைய அச்சத்தை அகற்றியது. சிறிது திடம் பெற்றார்கள்.

"நீங்கள் உணவுக்கும் உடைக் குத் மெத்த சிரமப்படுவதாக நான் உணர்கின்றேன். இங்கு மங்குமாக நீங்கள் இனி அலைய வேண்டாம். நமது சிங்கார அரண்மனையிலே உங்களுக்கு நான் வேலை தந்து விட்டேன். ஆளுக்கு 300 ரூபாய் சம்பளம். உங்களுக்கு இங்கேயே சாப்பாடு. துணி மணி எல்லாம் நானே தருவேன். கவலை யற்று இங்கு வேலை பார்த்துக் கொண்டு இருங்கள்'' என்றார். வெள்ளிக்கிண்ணங்களில் குங்கு மப்பூ இட்டுக் காய்ச்சிய பால் தந்தார்

இவர்கட்குக் கனவா நனவா என்று புரியவில்லை. "நமக்கு மாதம் பதினைந்து ரூபாய்கூட யாரும் தரமாட்டார்களே? உத வாக்கரைகள் என்று நம்மை யாருமே வேலைக்கு வைத்துக் கொள்ள மாட்டார்களே? நமக்கு இன்று பதினொன்றா மிடத்துக்குக் குரு வந்து விட்டார். இன்றுடன் நமது கவலை ஒழிந் தது!'' என நினைத்தார்கள். அவர் அடிமலர் மீது வீழ்ந்தார்கள். "நாங்கள் உய்வு பெற்றோம்'' என் றார்கள்.

உடனே அத் தலைவர் அவர் கட்கு நல்ல பட்டு வேட்டிகள் தந்து, "என்னிடம் ஊழியம் புரி கின்ற நீங்கள் சிறப்பாக இருக்க வேண்டும். இனி ஒழுங்காகவும் பெருந்தன்மையாகவும் இருங் கள்'' என்றார். "நல்லது'' என்றார் கள்.

அதுமுதல், அவர்கள் கண்ட இடங்களில் அலைவதில்லை. குடி, வெறி, களவு, கொலை முதலிய தீமைகளை விடுத்தார்கள். அவரு டைய அரண்மனையில் இருந்து அலுவல் பார்த்தார்கள். எஜ மானுக்கே நேர் அடிமைகளாகி விட்டார்கள். அது மட்டுமல்ல; முன் தாங்கள் கைப்பம்பரமாய் ஆட்டிய எஜமானுடைய புதல் வனுக்கு, நாம் அடிமைகள் என் பதை யுணர்ந்தார்கள்.

இவ்வாறு தன் மகனை அடிமை கொண்டு அலைக்கழித்த அப் புல் லர்களைத் தனக்கு ஏவலர்களாகச் செய்து, தன் மகனுக்கும் அடங்கி நடக்குமாறு செய்துவிட்டார் அத் தலைவர்.

இந்தத் தந்திரத்தையே இறை வன் என் விஷயத்தில் கையாண் டார்.

இறைவனுடைய புதல்வன் நான். மெய் வாய் கண் செவி நாசி மனம் முதலிய புல்லர்களுடன் கூடி, நான் அவமே திரிந்து அலைந்தேன். என் அப்பனை நாடாது உழன்றேன்; என் அப்பன் அகிலலோக சக்கரவர்த்தி என அறியாது கெட்டேன்.

எம்பெருமான் என்ன செய்தான்? என்னை அடக்கி யாட்டி வைத்த மனம் முதலிய அந்தக் கரணங்களையும், கண் முதலிய பொறி புலன்களையும், அவர் தனக்கு நேரே அடிமையாகக் கொண்டார்.

என் சிந்தனையை அவருக்கே ஆக்கிக் கொண்டார். என் கண்களை அவர் திருவடிக்கே ஆளாக்கிக் கொண்டார். என் கரங்களை அவர் தன்னையே வணங்குமாறு செய்தார். வம்பு வார்த்தைகள் பேசிக் கொண்டிருந்த என் வாக்கை அவருடைய மணி வார்த்தைகளையே பேசுமாறு செய்துகொண்டார். இவ்வாறு ஐம்புலன்களும் மகிழும்படி இறைவன் வெளிப்பட்டுத்தோன்றி ஆட்கொண்டார்.

அன்றியும் என் உள்ளே புகுந்து அமுதத்தை நிறைத்துத் தேக்கி அருள் புரிந்தான். இறுதியில் அவனையே எனக்குத் தந்துவிட்டான். அங்ஙனம் தந்த ஆண்டவன் கருணை மலையாகவும், ஒப்பற்ற ஒளிமயமாகவும் விளங்குகின்றான். அதனால் எனக்கு இன்பம் துன்பம், இகழ் புகழ், இறப்பு பிறப்பு, நினைப்பு மறப்பு என்ற இரட்டைகள் இல்லாமற் போய் விட்டன.

இனி மணிவாசகப் பெருந்தகையார் கூறுகின்ற அமுதப் பாடலைப் பாருங்கள்:

“சிந்தனைநின் றனக்காக்கி
நாயினேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப்
போதுக்காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி
வாக்குன்
மணிவார்த்தைக் காக்கி
ஐம்புலன்களார
வந்தனை யாட்கொண்டுள்ளே
புகுந்தவிச்சை
மாலமுதப் பெருங்கடலே
மலையே உன்னைத்
தந்தனை செந்தாமரைக்
காடனைய மேனித்
தனிச்சுடரே இரண்டுமிலித்
தனியனேற்கே.’
— திருச்சதகம்.

விச்சை மாலமுதப் பெருங்கடலே! — அடியேனையும் அடியேனது கருவிகரணங்களையும்ஆட்கொள்ளும் வித்தையில் வல்ல பெருமை தங்கிய அமிர்தக் கடலே!

மலையே! — என்றும் மாறுபாடின்றி மலைபோல் விளங்குபவரே!

செந்தாமரைக்காடு அனைய மேனித் தனிச்சுடரே — சிவந்த

தாமரை வனம் போன்ற செம் மேனி எம்மானுகிய ஒப்பற்ற ஒளியே!

சிந்தனை நின்றனக்காக்கி — பொன்னையும் பொருளையும் மாதரையும் மக்களையும் சிந்தித்துத் திரிந்த எனது சிந்தனையைத் திருப்பி உன்னையே சிந்திக்குமாறு புரிந்து:

நாயினேன்றன் கண் இணை நின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி — வேறு வேறு காட்சிகளைக் கண்டு மயங்கித் திரிந்த அடியேனுடைய இரண்டு கண்களையும் உனது திருவடியையே நோக்குமாறு செய்து;

வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி —எனது காயத்தையும் உனது திருவடியையே வணங்குமாறு செய்து;

வாக்கு உன் மணிவார்த்தைக்கு ஆக்கி — வீண் வார்த்தைகளை ஒழியாது பேசிக்கொண்டிருந்த என் வாக்கை உனது மாணிக்க வாசகத்தையே பேசுமாறு புரிந்து;

ஐம்புலன்கள் ஆர வந்தனை — எனது ஐம்புலன்களும் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று உன்னையே அநுபவிக்குமாறு தோன்றி வந்தருளிச் செய்தாய்.

உள்ளே புகுந்து—எனக்குள்ளே புகுந்தனை.

உன்னைத் தந்தனை — அன்றியும் உன்னையே எனக்குத் தந்தருளினுய்.

இரண்டும் இல் இத் தனியனேற்கே — அதனுல் இத்தனியனேற்கு இன்ப துன்பம் என்ற இரண்டும் இல்லையாயின.

# குற்றம் புரிந்தவர்கள் வணக்கத்துக்கு உரியவர்கள்!

மஹரிஷி அரவிந்தர்

ஒரு கருத்தென்பது உண்மையுமன்று, பொய்யுமன்று. வாழ்க்கைக்குப் பயன்படுவது அல்லது பயன்படாதது என்ற அளவில் தான் அதை நோக்க வேண்டும். அது காலத்தில் பிறந்தது; கால வெள்ளத்தில் அதன் விளைவும் சிறப்பும் மாய்ந்துவிடும். வெறும் கருத்தைக் கடந்து சென்று அழிவிலா ஞானச் செல்வத்தை நாடுவாய்.

வாழ்க்கை நடத்துதல் பொருட்டுக் கருத்தைப் பயன் படுத்திக் கொள்வாயாக. ஆனல் அதன் தளைகள் கொண்டு உன் ஆன்மாவைச் சிறைப்படுத்தி விடாதே.

ஒவ்வொரு சட்டமும் ஆர்வமிக நம்மைத் தழுவினுலும் சரி, அல்லது நம்மை வலிய ஆட்கொண்டாலும் சரி, அதற்கு மாருக இன்னும் ஒரு சட்டம் இலங்கும் என்பதை உணர்வாய். அது செயற்படுதலால் முன்னிருந்த சட்டத்தின் வேகம் தடையுறலாம். சற்று தன் இயல்பில் திரியலாம். அது ஒழிந்து போய் விடலாம். அல்லது அதன் கையில் பிடிபடாமல் ஒருவன் தப்பவும் கூடும்.

நம்மை மிகவும் கட்டுப்படுத்துகிற இயற்கைச் சட்டம் என்பது. நிலையுற்ற நடைமுறையாகும், இயற்கையின் இறைவன் இந்தச் சட்டத்தை அமைத்து, அதை இடையருது பயன் படுத்திக் கொள்கிருன். இந்தப் பேரான்மா தான் அதை அமைத்தது. அதைக் கடந்து செல்லவும் அதனுல் இயலும்.

முதன் முதலாக நம்முடைய சிறைச்சாலைக் கதவுகளைத் திறந்து வைக்க வேண்டும். இயற்கையன்னையின் மடியில் உறங்குவதை நீத்து, மேன்மேலும் பேரான்ம நிலையில் உறையக் கற்க வேண்டும்.

சட்டமென்பது ஒரு நடைமுறை. அல்லது சுருக்க விதிமுறையாகும். ஆனல் இந்த நடைமுறையை ஆன்மா பயன் படுத்

திக்கொண்டு, சுருக்க விதி முறையைக் கடநது நிற்கின்றது.

"இயற்கை முறைக்கு ஏற்ப நீ வாழ்வாயாக" என்று, குடதிசையில் ஓர் ஒழுக்க விதி உலாவுகின்றது. எந்த இயற்கை முறையென்பதுதான் வினுவாகும். உடலின் இயற்கை முறைப்படியா? அல்லது உடலேயும் தாண்டி நின்ற ஓர் இயற்கையின் முறைப்படியா? இதை முன்பே வரையறை செய்து கொள்ள வேண்டும்.

அமர நாட்டுச் செல்வ! இயற்கை முறைப்படி உன் வாழ்வாம் யாழை மீட்டாதே. ஆண்டவன் இசைக்கேற்ப உன் வாழ்வு தாண்டவம் ஆடட்டும். உன் உளத்திலே உறையும் உத்தமன் கட்டளேக்கேற்ப நடக்கும்படி, இயற்கையன்னேயையும் வற்புறுத்துவாயாக.

கால தேசம் கடந்தது கடவுளின் முன்னறிவாகும். இந்த முன்னறிவைக் கொண்டு, கால தேச நிகழ்ச்சிகள் நடந்தே தீரும். இந்த முன்னறிவேதான் விதியெனப்படும். ஆண்டவன் முன்னறிந்த ஒன்றை, முரண்பட்ட போராட்டம் மூலமாக வலியுறுத்தும் ஆற்றல் செயற்படுத்துகின்றது.

ஆண்டவன் சங்கற்பித்து எதையும் முன்னரே அறிந்து விட்டான் என்ற காரணத்தால், நீ அவனுடைய அருளுக்காகக் காத்திருப்போம் என்ற எண்ணம் கொண்டு அயர்ந்து அமர்ந்துவிடாதே. உன்னுடைய செயலும் அவனுடைய திறம் வாய்ந்த சிறப்புள்ள சக்திகளில் ஒன்றன்ருே! எழுவாய்! இடையருது செயலாற்றுவாய்!! அகந்தையால் இது நிகழற்க. நீயும் சூழ்நிலேயாம் கருவியன்ருே? அவன் முன்பே வகுத்த நிகழ்ச்சிக்குத் தெள்ளத் தெளிவான ஒரு காரணமென்று, நீ அறிந்து கொள்வாய்.

நான் ஒன்றையும் அறியாக் காலத்தே, குற்றம் புரிந்தவர்கள், தீச்செயலில் மண்டியவர்கள், தூய்மையற்றவர்கள், இவர்களே மிகவும் வெறுத்தேன். ஏனெனில், இவற்றில் யானும் ஆழ்ந்தவனன்ருே? ஞான நன்னீரால் கழுவப்பட்டு என் கண்கள் திறந்தவுடன், கள்வன் கொலேகாரன் இவர்கள் முன் உளம் கனிந்து பணிவுடன் வணங்கி நின்றேன். விலேமகள் பாதங்களேயும் நான் போற்றினேன். கோரத் தீச்செயலாம் சுமையை நம் பொருட்டு ஏற்று, உலகக் கடலிலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட நச்சை இவர்கள் பெரும்பாலும் பருகினுர்கள் அல்லவா!

அமரர்களேவிட அரக்கர்கள் வலியவர்கள் அல்லவா! கடவுளின் வெஞ்சீற்றம், பகை, இவற்றின் சுமையை இசைந்து பொறுக்க, இவர்கள் முன் வந்துள்ளார்கள். அமரர்களோ, இறைவனின் இன்பச் சுமையாம் அன்பையும், பரிவு தொய்ந்த

பேருவகையையும் தான் ஏற்க இயலும்.

இறுதி இன்பத்திற்குத் துன்பமும், முழு வெற்றிக்குத் தோல்வியும், இறுதி விரைவிற்குத் தடையும், முறையே இன்றியமையாதவை என்று உன்னால் உணர இயலுமாயின், அப்பொழுதுதான் ஆண்டவனுடைய அருட்செயல்களுள் ஏதோ ஒன்றை நீ அறிவதற்குத் தொடங்குகின்றாய் என்று இயம்பக்கூடும். அந்தக் காட்சி கண்களுக்குச் சற்றுத் தெளிவில்லாமலும் மங்கலாகவும் இருக்கக் கூடும்.

உடல் நலப் புதிய இன்பத்திற்கு எல்லா நோய்களும் ஒரு கருவியாய் அமைகின்றன. ஆழ்ந்த இன்பம், நன்மை, இவற்றை நண்ணுவதற்குத் தீமையனைத்தையும் அலக்கண் அனைத்தையும், இயற்கையன்னை பயன்படுத்திக் கொள்கின்றாள். மிக விரிந்த அமர வாழ்வின் கபாடத்தை, மரணத் தேவன் திறந்து வைக்கின்றான். ஏன் எப்படி இவ்வாறு நிகழ வேண்டும் என்பது, இறைவனின் இரகசியமாகும். இந்த மர்மத்தை, அகந்தை யொழிந்த தூயோனே பிளந்து ஊடுருவிப் பாய இயலும்.

"ஏன் என்னுடைய மனமும் உடலும் துன்பத்தில் உழல்வது?" என்ற வினா எழக்கூடும். திரைக்குப் பின்னுள்ள உன் ஆன்மா அத்துன்பத்தை விழைவதுமன்றி, அதில் திளைக்கவும் செய்கின்றது. உன் திடசங்கற்பம் கொண்டு இடையறாது முயன்று வருவாயாயின், கலப்பற்ற இன்பமாம் ஆன்ம நெறியை உன்னுடைய கீழான உறுப்புக்கள்மீது ஆட்சி புரியும்படி செய்யக்கூடும்,

குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சி துன்பத்தையோ இன்பத்தையோ படைக்கும் என்ற இருண்ட இரும்பனைய நியதி ஒன்றில்லை. புறத்திலிருந்து அவயவங்கள் மீது பாய்ந்து வருகின்ற பிரும்மத்தின் விரைவையோ, அழுத்தத்தையோ, தாங்கி நிற்கும் ஆன்மாவின் ஆற்றலைப் பொறுத்தவையாய் இருக்கின்றன இன்ப துன்பங்கள்.

உன் இதயத்தில் திகழும் ஆன்ம சக்தி புறத்திலிருந்து வரும் ஆற்றலை எதிர்க்கும்பொழுது, மனம், உடல் இவற்றின் அனுபவங்களோடு இயைந்துபோக இயலவில்லை. அக்காரணம் பற்றியே துன்பமும், துயரும், அமைதியின்மையும் உனக்கு ஏற்படுகின்றன. உலகச் சக்தி எழுப்புகின்ற வினாக்களுக்கு உன்னகத்தேயுள்ள ஆற்றல் தக்க விடைகளையளிக்குமாறு நீ அதை பொருத்துவாயாகின், துன்பம் மகிழ்ச்சியாக மாறும், அல்லது கலப்பற்ற இன்பமாய்க் கனியும், பேரின்ப நிலை தக்க தொடர்பைச் சார்ந்து நிற்கின்றது. ஒழுங்கே ஆனந்தத்தின் திறவுகோல்.

மானுடன் கடந்த பேராளன் யார்? பிரகிருதியைப் பேணும் துண்டுபட்ட மனத்தின் எல்லையைக் கடந்து நிற்கக் கூடுபவனும், எல்லாவற்றையும் தன்னிடத்தே காண்பவனும், தெய்வ ஆற்றலால் ஒரு தேவனாகத் திகழுபவனுமான ஒரு சான்றோனே அத்தகைய மானுடனாவான். அவன் கண் தெய்வ அருளும். ஆனந்தமும், தெய்வ ஞானமும் மிளிரக் காண்பீர்.

மனித இயல்பு வாய்ந்த உன் குறுகிய அகந்தையை வைத்துக் கொண்டு உன்னையே ஒரு மானுடம் கடந்த பேராளன் என்று கருதுவாயாகில், உன்னுடைய செருக்கே உன்னை ஓர் அறிவிலியாக ஆக்கிவிடும். உன்னை ஆட்டி வைக்கும் சக்தியின் கையில் ஒரு விளையாட்டுப் பொம்மைபோல் திகழ்வாய். உன்னுடைய மாயத் தோற்றங்களே உன்னை ஒரு கருவியாக அமைத்துவிடும்.

மானுடம் கடந்த பேராளனொருவனை, ஒட்டக இயல்பிலிருந்து எழுந்த சிங்க ஏறென "நீட்சி" கண்டார், அவனுடைய உண்மையான குலமரபுச் சின்னம் யாதெனில், வள்ளற் பசுவின் மீது நிற்கின்ற ஒட்டகமிசை அமர்ந்திருக்கும் ஒரு சிங்கமேயாகும் மன்பதைக்கு ஓர் ஊழியனாக நீ விளங்காமற்போனால், அதன் தலைவனாக நீ இலங்க முடியாது. எல்லாவற்றையும் தன் மாபெரும் மடியிலிருந்து சுரக்கும் வசிட்டனின் காமதேனுவைப்போல உன் இயல்பை அமைத்துக் கொள்ள முடியாது போமாயின், சிங்க இயல்பு வாய்ந்த உன்மானுடம் கடந்த நிலை என்ன பயனை நல்கும்?

அச்சமின்மைக்கும் மேலாண்மை ஆட்சிக்கும் இவ்வையகத்தில் ஒரு சிங்க ஏறு போலவும், பொறைக்கும் உழைப்பிற்கும் ஓர் ஒட்டகம் போலவும், அமைதிக்கும் அருள் இரக்கத்திற்கும் தாயனைய அன்புதவிக்கும் ஓர் ஆவைப் போவும் திகழ்வாயாக. தன் விலங்கிரையைக் கிழித்துத்தின்றே மகிழும் ஒரு சிங்கம் போல், ஆண்டவன் அளிக்கும் இன்பங்கள் அனைத்தையும் மண்டிப் பருகுவாயாக. ஆனால் மன்பதை யனைத்தையும் அந்த வரம்பிகந்த போகக் கழனிக்கு அழைத்துச் சென்று, அதில் உழன்று உழன்று இன்பப் பயிர் தனை மேயும்படி செய்வது உன் கடமையாகும்.

நன்றி: ஞானதீபம்



# ஸ்ரீ குருஞான சம்பந்தர்

பேராசிரியர் ஸ்ரீ வி. சா. குருசாமி தேசிகர்

முடியுடை மூவேந்தர் தம் ஆட்சி தமிழகத்தில் கி. பி. பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் நிலைதடுமாறியிருந்தது. தமிழகத்தின் சிறப்பிற்கெல்லாம் காரணமாக இருந்த மொழியும், சமயமும், கலையும், மரபும், பிற மதத் தாக்குதல்களாலும், அன்னியர் வருகையாலும் நலிவுற்றிருந்தன. தமிழகம் தன் தொன்மைச் சிறப்பெல்லாம் இழந்து, அல்லற்பட்டு ஆற்றாது அழுது கிடந்த காலத்தே, நாடும், மொழியும், நற்றமிழ்ச் சமயமும் ஓங்கிச் சிறக்கத் தருமபுரத்தே தமிழ் ஞானப் பண்ணை கண்ட தவத்தின் திருவுரு ஸ்ரீ குருஞான சம்பந்தர்.

கடந்த நான்கு நூற்றாண்டு காலங்களில் மொழி — சமயவரலாற்றில் பிரித்தறிய முடியாது ஒன்றிப் பிணைந்து பெரும் பணியைச் செய்து வரும் திருத் தருமபுர ஆதினத்தின் முதற்குரவராய், முத்தமிழ்ச் செம்மலராய் முழுஞான ஞாயிறாய் அவதரித் தருளிய பெம்மான் ஸ்ரீ குருஞான சம்பந்தர்.

திருக்கைலாய மலையில் இறைவன் நந்திதேவர்க்கு அருளிய ஞான உபதேசம், அகச்சந்தான புறச்சந்தானக் குரவர்களின் வழியாக, மண்ணுலக மக்களும் உய்யும் முறையில் கயிலாய பரம் பரை என்ற பெயரோடு வளர்ந்தோங்கி வருகிறது. அவ்வருளுபதேச பரம்பரையில் வந்து தருமையாதீனத்தை நிறுவியவர் ஸ்ரீ குருஞான சம்பந்தர். அவர் புகழைத் தொகுத்தாலோ எஞ்சும்; விரித்தாலோ நீளும்.

பெருமானை ஈன்றுதந்த பெருமையைப் பாண்டிநாட்டு ஸ்ரீ வில்லிபுத்தூர் பெற்றுச் சிறந்தது. கார்காத்த வேளாளர் திருமரபில் மீனாட்சி அம்மை எனும் குலக் கொடியோடு சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் நிகழ்த்திய இல் வாழ்வின் கனியென, இற்றைக்கு நானூறு ஆண்கட்கு முன்னே ஓர் சோமவாரத் திருநாளில் ஞான சம்பந்தர் எனும் நற்குழவி பிறந்தது. முன்னைத் தவமும், முழுதுணரும் பக்குவமும் ஒருசேர வாய்த்திடக் கலைநிரம்பிய நில

வாய், பதினுருண்டில் பலகலையும் பயின்ருர் பண்பின் திருவுரு. ஆறெழுகும் சடைமுடியார் அடி மலர்க்குப் பத்திமையும், அரனடியார் தமக்கெல்லாம் அன்பும் பூண்டு, பெற்ருேர் அகமகிழ வளர்ந்திட்டார் அறத்தின் செல்வர்.

தந்தை அழைக்கத் தாயார் உடன்வர, ஆன்மார்த்த மூர்த்தியாம் ஆலவாய் அண்ணலை அடி தொழச் சென்றனர் ஞானசம்பந்தர். வழிபாடு முடிந்தது. ''வருக இல்லிற்கு'' எனத் தந்தை அழைக்க, ''அனைத்துயிர்க்கும் அம்மையப்பர் மதுரை ஆலயத்தே அமர்ந்திருக்க, ஊனுடலைப் பெற்றெடுத்த உங்களுடன் வருவதற்கு ஒருப்படேன்''எனக் கூறி, உறைந்திட்டார் அரன் கோயில். தவ நெறிப்பட்டார் எனத் தன்மையால் அறிந்திட்ட தந்தை தாயர், தனிவிடுத்து ஊர்மீண்டனர். நாட்கள் நகர்ந்தன. அங்கயற்கண் அம்மையோடு ஆலவாய் அமர்ந்திட்ட அண்ணலைத் தொழுது ஆரா மகிழ்வில் அமைந்திருந்தார் சம்பந்தர்.

பொற்ருமரைக் கரையில் சிவ பூசை மேற்கொண்டு சிந்தை நெகிழ்ந்தார் சிலர் கண்டு, ''சிந்தை மகிழச் சிவபூசை நமக்கும் சித்திக்குமோ'' என்று சிவனடியை நினைத்திருந்தார். அன்றிரவு கனவிடை வந்த கண்ணுதற் பெருமான், ''ஞான சம்பந்த! பொற்ருமரையின் ஈசானத்திக்கில் பெட்டகத்துள்ளோம்; எடுத்துப் பூசிக்க'' என அருளிமறைந்திட்டார். வியப்பில் விடிந்தது பொழுது. மதுரைச் சொக்கன் சம்பந்தர் கைகளில் எழுந்தருள, விரும்பி மகிழ்ந்து, களித்து, ஆடிப் பாடிக் கண்ணீர் உகுத்தனர்.

''பூசிக்கும் முறையும், அதற்கேற்ற ஞானமும் நல்கவல்ல நல்லாசிரியரையும் தந்து அருள வேண்டு''மென விண்ணப்பித்தருள, கனவிடைத் தோன்றிய செந்தமிழ்ச் சொக்கன், ''நம் உபதேச பரம்பரையில் வந்த ஞானப்பிரகாசன் ஆரூரில் உள்ளான். அவன் பாற் செல்க'' என அருளி, ஞான சம்பந்தர் வருகைபற்றி ஞானப்பிரகாசர்க்கும் அறிவித்து மறைந்தருளினுன். இறைவன் கட்டளைப்படி ஆருரை அடைந்து, ஆரூர்ச் சித்தீச்சரத்தில் எழுந்தருளியுள்ள தென்முகக் கடவுட் சந்நிதியில் ஞானுசிரியரைக் கண்டு தொழுது, திருவருள் நோக்கமும், ஞானேபதேசமும் செய்விக்கப் பெற்று, ஞான தேசிகரது அருட்கடலில் அளப்பில் ஆனந்த மெய்தி நின்றனர். சொக்கன் அருள் வியந்து ''சொக்க நாதக் கலித்துறை''யும், ஞானுசிரியரை வியந்து, ''ஞானப்பிரகாச மாலை''யும் ஞானசம்பந்தரால்திருவாய் மலர்ந்தருளப் பெற்றன.

அருள் ஞான ஆசான் அடிநிழலில் அமைந்திருந்த நாளில், அற்புதம் ஒன்று நிகழ்ந்தது. அர்த்தசாம வழிபாடாற்றி இல்லம் மீண்ட ஆசிரியர்க்குப் பின் கை விளக்கேந்தி வரும் பேறு, ஒரு

நாள் ஞானசம்பந்தர்க்குக் கிட்டியது. திருமடத்துள் உட்புகும் நிலையில், கைவிளக்கேந்தி வந்நாரை 'நிற்க' எனச் சொல்லி உட்புகுந்தனர் குருமூர்த்திகள். ஆசாரியன் கட்டளைப்படி இரவெல்லாம் கைவிளக்கேந்தி ஞான நிட்டையில் நின்றனர் ஞானசம்பந்தர். அவர் பெருமையை உலகறியவே போலப் பெருமழை பெய்தது. சிறு துளியும் மேனி நனைக்காது சிந்தை மகிழ்ந்து நின்றிருந்தாரை, விடியல் வெளிப்போந்த குரு பத்னியார் கண்டு அதிசயித்துத் தம் கணவர் பாற்கூற, திருவருட் செயல் கண்டு ஆசிரியர் உட்பட அனைவரும் மகிழ்ந்து அதிசயித்து நின்றனர். அனைவர்க்கும் அருளொளி வழங்க வல்ல ஞானம் கைவரப் பெற்ற தம்மாணவரை நோக்கி, "நீவிர் விரும்பிய இடத்திற்சென்றிருந்து குருநாதராய், பக்குவம் பெற்ற மாணவர்கட்கு அருளுபதேசம், சமய பரிபாலனம் செய்து வருக" எனக் கட்டளையிட்டருளினர்.

ஆசிரியர் கட்டளை வழிநின்ற சம்பந்தர், அவரை அரிதின் நீங்கி, மாயூரத்திற்குக் கிழக்கே காவிரியின் தென்கரையில், எமதருமன் வழிபட்டு அருள்பெற்றதும், 'வில்வாரண்யம்' என்றபண்டைப் பெயரதுமாகிய தரும புரத்தையடைந்து, குருஞான சம்பந்தராய் பக்குவிகட்கு ஞான உபதேசம் செய்து, பற்பல அற்புதங்களால் திருவருள் விளக்கஞ் செய்து கொண்டு, குருமூர்த்திகளாய் எழுந்தருளியிருந்தனர்.

அவர்தம் அருள் ஞான நிலை கண்ட அகத்திய முனிவரின் சீடர்கள், தருமபுரத்திருந்த தங்கள் ஆச்சிரமங்களையும், தருமபுரீசுவரர் திருக்கோயிலையும் அவரிடம் ஒப்படைத்துச் சென்றனர். குருஞான சம்பந்தமூர்த்திகளும் அவைகளை அங்ஙனமே யேற்றுத் திருப்பணி பல வியற்றி திருவிழாக் கண்டு, திறம்படப் பரிபாலித்து வரலாயினர்.

ஒருகால் தில்லைசென்று, எல்லையில் பரம்பொருள் திருநடங் கண்டு மகிழ்ந்து, ஆயிரக்கால் மண்டபத்தே அமர்ந்து ஆனந்த நிட்டை கூடியிருந்தனர். ஆடவல்லான் அருட்பெருக்கால் சிவகாமியம்மை தம் பள்ளியறையினின்றும் பாயசமும், திருவமுதும், கங்கைநீரும், கொணர்ந்தளித்தருள மகிழ்ந்திருந்து, மீளவும் தருமை மீண்டு ஞானச் செங்கோல் செலுத்தி வரலாயினர்.

இவர் தம் ஞான நோக்கால் புலியும் பசுவும் ஒரு துறையில் நீராடி ஓர்பொழிலிற்களித்தாடின. இவ்வாறான காலத்தே நாடும், மொழியும், நற்றமிழ்ச் சைவமும் நனி சிறந்தோங்க, அருள் நூல்கள் பலவருளிச் செய்வாராயினர். முப்பொருள் இயல் பறிந்து, பிரபஞ்ச வாழ்வை வெறுத்து, உயிர்களெல்லாம் சிவானந்த வாரியுள்ளே ஒன்ற வேண்டுமென்ற கருணையினாலே, 'சிவபோகசாரம்' என்ற சாத்திர நூலையருளினர். 'சிவபோகசாரம்' என்னும் இந்நூல் பதினெண் சித்தரின் பாடலில் இடம் பெற்று, தமிழ் மக்கள் அனைவராலும் போற்றிப் படிக்கப்படும் ஞான நூலாகும்.

"ஆசையறாய் பாசம்விடாய்
ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை
நீநினையாய் — சீசீ
சினமே தவிராய் திருமுறைகள்
ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்"

என்பன போன்ற அரிய நீதி களையும் சமய உண்மைகளையும் விளக்கும் திருநூல் அது. அந்நூற் பொருளை அனுபவத்தின் உணர் வான் வேண்டி, 'சோடசகலாப் பிராசாதசட்கம்' என்ற நூலையும், 'திரிபதார்த்த ரூபாதி சகாரிய அகவல்' என்ற பிறிதோர் நூலை யும் அருளிச் செய்வாராயினர்.

இன்னும், அவர்கள் காலத்தே வாழ்ந்திருந்து, ஆன்மானந்தவா தம் என்ற நெறி கண்டு, அதனை விளக்க 'முத்திநிலை' என்ற நூல் செய்த 'கண்கட்டி மறைஞான பண்டாரம்' என்பார் தம் பொருந்தாக் கொள்கையைத் தகர்க்க, 'முத்திநிச்சயம்' என்ற பேரருள் நூலை யாத்தளித்தனர்.

தம் ஆன்மார்த்த மூர்த்தி யாகிய சொக்க நாதப் பெரு மானை வழிபடுங் காலத்தே, அவர்கள் உள்ளுருகிப் பாடிய வெண்பாக்களின் தொகுப்பே, 'சொக்கநாத வெண்பா' என்னும் நூலாக மலர்ந்தது. தம் ஞான தேசிகரை குருவாரந்தோறும் கமலை சென்று கண்டுவரும் வழக்க முடைய குருஞான சம்பந்தர், அவர் பரிபூரணமடைந்தமைக்கு ஆற்ருது இரங்கிப் பாடிய பாடல் கள் 'நவரத்தினமாலை' என்னும் பனுவலாயின.

குருஞானசம்பந்தர் இங்ஙனம் அருட் செங்கோல் ஓச்சிவரும் நாளில், தமக்குப் பரிபூரண நிலை வருவதைத் திருவருள் நோக்கால் உணர்ந்து, தமது ஆச்சிரமத்தின் மேற்குப் புறத்தில் 'ஞானபுரீசு வரர்' என்னும் திருப் பெயரால் சிவலிங்கப் பிரதிட்டை செய்து, தம் மாணுக்கருள் அதிபக்குவி யான ஆனந்தபரவசர் என்பா வர்க்கு ஞானுேபதேசம் செய்து, பட்டம் நல்கி, அச்சிவலிங்கப் பெருமான் திருவடி நிழலில் சிவ சமாதி கூடினுர்கள்.

பின்னுளில் ஆனந்தபரவசரும் சிவசமாதி கூடவே 'ஞான சந்தான நெறி வளர்ந்து உலகம் உய்ய வேண்டுமே' என அடியார் கள் கூடி முறையிட, குருஞான சம்பந்தர் சமாதியினின்றும் வெளிப் போந்து, அடியவர் கூட் டத்துள், 'சச்சிதானந்தர்' என் பார்க்கு ஞானுேபதேசம் செய்து பட்டம் நல்கி, நிட்டானுபூதி கிட்டப்பெரு அவர்கட்குப் பல பாடல்கள் அருளி ஞானநோக்கம் செய்தருளினுர்.

இவ்வாருன அற்புதங்கள் பல நிகழ்த்தித் திருவருள் விளக்கஞ் செய்து, திருக்கயிலாய பரம் பரைத் திருத்தருமபுர மடாலயத் தினைத் தோற்றி, சாத்திரநோக் குப் படைத்த அருள்நூல்கள் பலவும் திருவாய் மலர்ந்தருளி, வளர்ச்சி குன்றியிருந்த சமய நெறிக்கு உயிரூட்டி அருள் வழங் கிய ஆதிகுரு மூர்த்திகளாகிய ஸ்ரீ குருஞான சம்பந்தப் பெம்மான், ஓர் வைகாசித் திங்கள் அமர பக்கத்துச் சஷ்டி திதியில் சிவ சமாதி கூடி சிவபரிபூரணம் எய்தினுர்கள்.



# ஸ்ரீமத் பகவத் கீதையின் சாரம்

ஸ்ரீ ம. ர ஸம்பத்குமாரன்

அர்ஜுனனுக்கும் கண்ணனுக்கும் ஏற்பட்ட ஸம்வாதமான பகவத் கீதை, 700 சுலோகங்கள் கொண்டது. மிக எளிதாகத் தோற்றும் நடையில் அமைந்துள்ளது. ஆயினும், அர்ஜுனனின் ஐயங்களுக்கும், அவைகளைத் தீர்க்கக் கண்ணன் அளிக்கும் விடைகளுக்கும், உள்ள உட்கருத்துகளை அறிவது எளிதன்று.

நுனிப்புல் மேயும் ஐரோப்பிய பண்டிதர்கள், கீதையில் குழப்பத்தையே காண்கிறார்கள். பெரியோர்களான நம் மதாசாரியர்கள் குழப்பங்களைத் தவிர்த்துத் தெளிவான பொருளைக் காணும் வழியைக் காட்டியுள்ளார்கள். ஆயினும், அவர்களுள் சில கருத்து வேற்றுமைகள் உள்ளன.

மானிட உருவில் அவதரித்த கடவுளே ஆசிரியனாய், அவன் அருளால் ஆட்கொள்ளப்பட்ட அர்ஜுனனாகிய சீடனுக்கு உபதேசிக்கப்பட்ட கீதை ஆழ்ந்த கருத்துக்கள் கொண்டிருப்பது இயல்பே. அதனாலேயே, மதாசிரியர்கள் தங்கள் தங்கள் மதங்களுக்கு கீதையில் ஆதரவைக் கண்டுள்ளார்கள். எனினும், கீதையின் ஸாரமான அர்த்தம் ஒருவாறு ஸர்வஸம்மதமாய் அமைந்துள்ளது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸரை ஒருகால் கீதையின் ஸாரம் என்னவென்று வினவிய பொழுது நாம் மறக்க முடியாத வகையில் எளிதான விடையளித்தார்.

'கீதா' என்னும் பெயரைத் தொடர்ந்து உச்சரிக்கும்போது, அது விளங்கும் என்றாராம் அவர். 'தாகி' (தியாகஞ் செய்) என்பதே 'கீதா' புகட்டும் பாடம். நூற்றுக்கணக்கான சுலோகங்களால் ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விளக்கிக் கூறியதை, ஒரே பதத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் நமக்குச் சுருக்கிக் காட்டிவிட்டார்.

மீண்டும் மீண்டும் அர்ஜுனனுக்கும், அவன் மூலமாய் நமக்கும், கண்ணன் உபதேசித்தது தியாகம் செய்வதையே. "நற்காரியங்களைச் செய், கடமையைச் செய், பயனை விரும்பாதே" என்பதே கண்ணன் கூறுவது. "வீடுமின் முற்றவும்" என்று நம்மாழ்வாரும் நமக்கு இதையே ஸாரமாக உபசித்துள்ளார்.

இவ்வாறே கீதையின் ஸாரத்தை யறிந்து, ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ யாமுனர், ஸ்ரீமத்வர் முதலான பெரியோர்கள் விளக்கம் அருளி யுள்ளார்கள்.

சங்கரபாஷ்யத்தின் முன்னுரை யில், தாம் விளக்கும் நூல் வீடு பெற்றுய்வதற்காக ஒரு தர்மத் தைப் புகட்டுகிறதென்றும், ஸர் வகர்ம ஸந்நியாஸ பூர்வகமான ஆத்மஜ்ஞான நிஷ்டா ரூபமென் றும், ஸ்ரீ சங்கரர் கூறியுள்ளார். அதாவது, கருமங்களை அறவே விட்டு, ஞானத்தைக்கைக் கொண்டு மோக்ஷத்தை அடைய வேண்டும். இவ்வர்த்தத்தை உறு திப்படுத்த, அனுகீதையிலிருந்து "ஞானம்ஸன்யாஸ லக்ஷணம்" என்னும் வாக்யமும், கிதையின் சரம சுலோகமும் மேற்கோளாகக் காட்டப்பட்டன.

விச்வரூப அத்யாய வியாக்யா னத்தின் இறுதியில் உள்ள சுலோ கத்தில், ஸ்ரீ சங்கரர் கீதா ஸாரத் தைக் காண்கிறார். அந்த சுலோ கம் கீழ் வருமாறு உள்ளது:

"மத்கர்மக்ருத் மத்பரமோ மத்
பக்த: ஸங்க வர்ஜித:
நிர்வைர: ஸர்வ பூதேஷுய:
ஸ மாமேதி பாண்டவ"

இதன் பொருள்: "எவன் எனக் காகக் கர்மங்களைச் செய்து, என் னையே மேலான கதியாகக் கொண்டு, என்னிடத்தில் பக்தி கொண்டு, (செல்வம், மனைவி, மக் கள், நண்பர் முதலிய) மற்றவை களில் பற்றற்று, யாவற்றினிட மும் பகைமையின்றி இருக்கி ருனே, அவன் என்னை அடை கிருன், ஓ பாண்டவா."

இதை விவரிக்கும்பொழுது, ஸ்ரீ சங்கரர் எழுதுகிருர்: "இப் பொழுது முக்தியை அடைவிக்கச் செய்வதாய், கீதா சாஸ்திரம் முழுவதற்கும் ஸாரமாய் அமைந் துள்ள அர்த்தம், ஒன்று சேர்க்கப் பட்டு, நடைமுறையில் பின்பற்ற வேண்டிக் கூறப்படுகிறது." கீதை யில் ஸகுண பிரம்மோபாஸனை உபதேசிக்கப் பட்டிருப்பதை இங்கு எடுத்துக்காட்டுகிருர்.

தமிழ் நாட்டு வைணவர்களால் ஆளவந்தார் என்று அன்புடன் போற்றப்படும் ஸ்ரீ யாமுனர், தம் முடைய 'கீதார்த்த ஸங்கிரஹ'த் தின் ஆதியிலும் முடிவிலும் கீதையின் ஸாரத்தை நமக்குத் தெளிவுபடுத்தியிருக்கிருர்.

"ஸ்வதர்ம ஞான வைராக்ய
ஸாத்ய பக்தியேக கோசர:
நாராயண: பரம்பிரம்ம கீதா
சாஸ்த்ரே ஸமீரித:"

இங்கு பரப்ரஹ்மமான நாரா யணனே தத்துவ, ஹித, புரு ஷார்த்தங்கள் என்று அறியலாம். "வர்ணாச்ரமதர்மங்கள், ஜீவாத்மா பரமாத்மாவின் சேஷப் பொருள் என்னும் ஞானம், இவைகளால் அடையக்கூடிய பக்தியின் மூல மாகவே அறியக்கூடியவனாய், நாராயணன் கீதா சாஸ்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளான்" என்

பதே இந்த சுலோகத்தின் பொருள்.

ஸங்கிரஹத்தின் முடிவில்,

"நிஜகர்மாதி பக்த்யந்தம்
குர்யான் ப்ரீத்யைவ காரித:
உபாயதாம் பரித்யஜ்ய
ந்யஸ்யேத் தேவேது
தாமபீ:

ஏகாந்தாத் யந்த தாஸ்யைக
ரதிஸ் தத்பதம் ஆப்நுயாத்
தத்ப்ரதானம் இதம்சாஸ்த்ரம்
இதி கீதார்த்த ஸங்கிரஹ:"

அதாவது: "தான் செய்யவேண்டிய கர்மங்கள் முதல் பக்தி வரையில் யாவற்றையும் கடவுளிடமுள்ள அன்பினுலேயே தூண்டப்பட்டுச் செய்பவனுய், அவைகள் உபாயமென்னும் எண்ணத்தையும் கைவிட்டு விட்டு, அச்சமற்றவனுய், கடவுளினிடமே அவைகளை வைக்கக் கடவன். தொண்டனுயிருக்கும் தன்மையிலேயே மகிழ்ச்சிகொள்ள வேண்டும். அதுவும், நாராயணனுக்காகவே எல்லையில்லாத்தொண்டு செய்யும் அவா வேண்டும். இத்தகையவனைப் பற்றியும், அவன் அடையும் முக்தியைப் பற்றியுமே கீதா சாஸ்திரம்."

ஸ்ரீயாமுனர் காட்டிய வழியைப் பின்பற்றிய ஸ்ரீ ராமானுஜர், கீதையின் ஸாரார்த்தமாகப் பக்தியை உபபாதிக்கிருர். கர்ம ஞானங்கள் பக்திக்கு உதவுகின்றன. சாஸ்திரங்களில் வர்ணுசிரம தர்மங்கள் பின்பற்றப்பட வேண்டுமென்று கட்டளையிடப் பட்டிருக்கிறது. அவைகளைச்செய்வதால் நமக்கு ஏதோ பயன்கிட்டும் என்ற நினைவில்லாமல், பரமனின் உகப்புக்காக அவை செய்யப்படும்பொழுது கர்மயோகமாகின்றன. இதனுல் ஜீவனின் இயல்பு நேராக அனுபவிக்கப் பட்டு, பரமனிடம் பக்தியும் தோன்றி, அவனை நேராகக் காணக்கூடிய யோக நிலையும் ஏற்படுகிறது. மேற் கொண்டு முக்தியும் கிடைக்கிறது. இவ்வாறு கீதையின் போக்கை விளக்குகிருர் ஸ்ரீ ராமானுஜர்.

"ஒன்பதாவது அத்யாயத்திலும், பதினெட்டாவது அத்யாயத்திலும், பக்தியோகத்தைக் கடைப்பிடிப்பவன் செய்யவேண்டியவை கூறப்பட்டுள்ளன.

"மன்மனு பவ மத்பக்தோ
மத்யாஜி மாம் நமஸ்குரு"

"என்னைத் தியானம் செய். என்னிடத்தில் அன்புகொண்டு என் நினைவில் மூழ்குவாயாக. (என்னிடத்தில் அன்புடன்) பூஜை செய். (அன்புடன்) பணிவோடு வணங்கு" இந்நெறியைப் பின்பற்றி மோக்ஷம் பெறச் செய்வதே கீதையின் நோக்கு.

இந்த பக்தியோகமென்பது உபநிஷத்துகள் உபதேசிக்கின்ற பிரஹ்ம வித்யையைக் கடைப் பிடிப்பவர்க்கு என்று விதிக்கப் பட்டிருக்கிறது. ஆயினும் ஸர்

வாதிகாரமாய் யாவரும் பின்பற்றக்கூடிய கர்மநெறியும் பக்தி நெறியும்கூட, கீதையில் காணலாம். ஒன்பதாம் அத்யாயத்தில், பாபப் பிறப்பு பிறந்தவர்கள் முதற்கொண்டு யாவரும் நற்கதியடையும் வழியைக் கண்ணன் அருளால் கூறுகிருன்:

மாம் ஹி பார்த்த வ்யபாச்ருத்ய
யோபி ஸ்யு: பாபயோனய:
ஸ்த்ரியோ வைச்யாஸ் ததா
சூத்ராஸ் தோபி யாந்தி
பராங்கதிம்

"எவர்கள் பாபப் பிறப்புடையவர்களோ அவர்களும், பெண்களும், சூத்திரர்களும், என்னைத் தஞ்சமாயடைந்து, மிக்க உயர்ந்த கதியை அடைகிருர்கள்" என்கிருர் கண்ணன்.

பதினெட்டாவது அத்யாயத்தில், நான்கு வர்ணங்களின் தர்மங்களையும் கூறிவிட்டு, யாவரும் தங்கள் கர்மங்களை ஊக்கத்துடன் நிறைவேற்றினுல், முக்தியை அடையலாம் என உறுதியளிக்கிருன் கண்ணன்; "ஸ்வே ஸ்வே கர் மணி அபிரத: ஸம்ஸித்திம் லபதே நர:" என்று. 'ஸம்ஸித்தி' யென்னும் பதத்தை 'பரமபதப் பிராப்தி' என ஸ்ரீராமானுஜர் உரையிடுகிருர்.

மிக்க எளிதான வழியில் பத்தியைப்பரமனிடம் காட்டும் சில வழிகளும் கீதையில் காணப்படுகின்றன. ஒன்பதாம் அத்யாயத்தில் அன்போடு கொடுக்கப்படும் எதையும் பெரும் பேருகப் பெற்றுக்கொள்ளும் அருள் வெள்ளம் தான் என்று கண்ணன் பறைசாற்றுகிருன்.

"பத்ரம் புஷ்பம் பலம் தோயம்
யோமே பக்த்யா ப்ரயச்சதி
ததஹம் பக்த்யுபஹ்ருதம்
அஸ்நாமி ப்ரயதாத்மன:"

"இலையோ, பூவோ, பழமோ, நீரோ, எவன் எனக்குப் பக்தியுடன் கொடுக்கிருனே, தூயமனதுடைய அவனுல் அன்புடன் கொடுக்கப்பட்ட அதை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன்"

பன்னிரண்டாவது அத்யாயத்தில், தன்னிடத்திலே மனத்தையும் புத்தியையும் நிலையாகவைக்க வேண்டும் என்று கூறி, பிறகு அவ்வாறு செய்யமுடியாதவன், அப்பியாசம் செய்ய வேண்டுமென்கிருன் கண்ணன். அது எவனுக்கு அரிதாகப்படுகிறதோ அவனை நோக்கி, "மத்கர்ம பரமோ பவ" என்கிருன்.

இதை விளக்குகையில், ஸ்ரீராமானுஜர் கண்ணனுக்காகச் செய்யப்படத் தக்க கர்மங்கள் யாவையென்று விளக்குகிருர்: கோயில் கட்டுதல், கோயிலுக்குப் பூந்தோட்டம் அமைத்தல். கோயிலைப் பெருக்கி நீர்தெளித்து மெழுகுதல், மலர்களைப் பறித்து மாலை தொடுத்தல். பூஜைகளைச் செய்வித்தல், நாமஸங்கீர்த்தனம்

செய்தல், வலம் வருதல், துதிசெய்தல் முதலியவை.

முடிவில் க்ண்ணன் பிரபத்தியைத்தான் உபதேசிக்கிருன்.

"ஸர்வ தர்மான் பரித்யஜ்ய
மாகேம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ
பாபேப்யோ மோக்ஷயிஷ் யாமி
மாசுச:"

"எல்லா தர்மங்களையும் அறவே விட்டு, என்னை ஒருவனையே தஞ்சமாக அடைவாயாக. நான் உன்னை எல்லாத் தீவினைகளினின்றும் விடுவிக்கிறேன். வருந்தாதே".

இதுவரை கீதோபதேசம் கேட்ட அர்ஜுனன் முகத்தில் துயரக்களையைக் கண்டு, கர்ம ஜ்ஞான பக்தி யோகங்களும் அவதார ரஹஸ்ய ஞானமும், புருஷோத்தம வித்யை முதலியவைகளும் செய்வதற்கு அரிதானவை என்றும், பரதந்திரமான ஜீவாத்ம ஸ்வருபத்திற்குத் தகாதவை என்றும், "இவற்ருலே எம்பெருமானைப் பெறல் என்பது ஒன்றில்லை, இனி இழந்தேபோம் இத்தனையாகாதே" என்னும் நினைவே அந்தத் துயரத்தின் காரணமென அறிந்தான் கண்ணன். அதை நீக்குவதற்காகவே பிரபத்தியை உபதேசிக்கிருன்.

முக்திக்காக விதிக்கப்பட்டிருக்கும் எல்லா உபாயங்களையும் அறவேவிட்டு, அர்ஜுனன் எதிரில் "கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேனு தூளி தூஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாட்டின திருவடிகளுமாய்" தேர்ப்பாகன் வேஷத்தில் நிற்கிற கண்ணனையே தஞ்சம் புகவேண்டும்; அப்பொழுதும்கூட, தான் ஏதோ உபாயத்தைக் கடைபிடித்ததாய் நினைக்கக் கூடாது. அவனைத் தஞ்சமடைய நம்மைத் தூண்டுவதும் அவன்தான்".

இவ்வாறு கீதையின் சரமோபதேசமாய் பிரபத்தி அமைந்திருப்பதால், அதையே கீதையின் ஸாரமெனக் கொள்ளவேண்டும். ஆனுல் வணங்கும் துறைகள் பல பலவாகியிருப்பதால், அதிகாரி பேதத்துக்கு ஏற்றவாறு அநேக நல்வழிகளைக் கீதை நமக்கு உணர்த்துகிறது. மத வேற்றுமைகளைப் பரந்த மனப்பான்மையுடன் கண்ணன் ஆய்ந்து நோக்கி, எல்லோருக்கும் அருள் செய்யும் ஆர்வம் தன்னிடமிருக்கிற தென்பதை வெளியிடுகிருன்:

"யோயோயாம் யாம்தனும்
பக்த: ச்ரத்த யார்ச்சிது மிச்சதி
தஸ்ய தஸ்யஅசலாம் ச்ரத்தாம்
தாமேவ வித தாம்யஹம்"

"எந்த எந்த பக்தன் எந்த எந்த உருவத்தை (அதாவது உருவம் கொண்டுள்ள என்னை) வணங்க விரும்புகிருனே, அவ்வவனுடைய சிரத்தையை நிலையுள்ளதாக நானே செய்கிறேன்." பூதம்,

பிரேதம், பிசாசு இவைகளை வணங்குபவர்களுக்கும், அவர்கள் கோரியதையளிப்பவனும் அவன் தான். சாத்திரத்தைத் துறந்தும் ஸாத்துவிக வழியில் நல்வாழ்வுக்கு முயன்றால், அவர்களுக்கும் அருள் செய்வான்.

இவ்வாறு மானிட குலத்துக்கே இருள் தருமா ஞாலத்தில் ஒளி வீசும் விளக்காக, வழிகாட்டியாக அமைந்திருக்கிறது கீதை. நம் நாட்டில் தலைமுறை தலைமுறையாய் அதன் முக்கியமான படிப்பினைகளை நம் வாழ் முறையில் புகுத்திவிட்டிருக்கின்றனர் நம் பெரியோர். கீதையை அறியாதவர்கள்கூடக் கடவுளுக்கு அமுது படைக்காமல் உண்பதில்லை. பூஜையோ சடங்கோ செய்ததும் "கிருஷ்ணார்ப்பணம்" என்று சொல்லும் வழக்கமும் கடைப்பிடிக்கப்படுகிறது, நாம் அறியாமல் கீதையைப் பின்பற்றுவதைவிட, அறிந்து அதன் உபதேசத்தைச் செயற்படுத்துவோமாயின், நாமும் உய்ந்து, உலகையும் உய்விக்கலாம்.

# சோதிர்லிங்கத் தலங்கள்

ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய

ஸ்வாமிகள், தருமையாதினம்

இறைவன் அறிவுமயமாக அறிவே உருவாக உள்ளவன். அறிவு ஒளிவடிவாக இருப்பது. ஆகவே, நம் ஆன்றோர்களும் சான்றோர்களும் சோதியாய் சுடராய் சூழொளி விளக்காய் இறைவனைக் கண்டு அநுபவித்தனர்; நமக்கும் அறிவித்துள்ளனர். ஆண்டவன், ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ் சோதியாய்த் தோன்றிய நிகழ்ச்சியைச் சிவ மகா புராணமும், ஏனைச் சிவ புராணங்களும் கூறுகின்றன. இங்ஙனம், இறைவன் சோதிப் பிழம்பாய்த் தோன்றிய இடமே திருவண்ணாமலை. அவ்வண்ணாமலை இன்னும் செம்மை நிறத்துடன் செம்மாந்திருப்பதே சிறந்த சான்று. இதே வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு விளங்குபவைதாம் துவாதச சோதிர்லிங்கத் தலங்கள். துவாதசம்—பன்னிரண்டு. பன்னிரண்டு தலங்கள் என்பது இதன் பொருளாம். சோமநாதம், மல்லிகார்ச்சுனம், உஜ்ஜைனி, மகாகாளம், ஓங்காரம், வைத்தியநாதம், பீமசங்கரம், இராமேசுவரம், நாகேசம், விசுவேசம், திரியம்பகம், கேதாரம், குசுமேசம் என்பன பன்னிரு சோதிர்லிங்கத் தலங்களாகும்.

(1) சோமநாதம்

குஜராத் மாநிலத்தில் கத்தியவார்த் தீபகற்பத்தின் தென்கரையில் அமைந்த பட்டினமாக விளங்குவது சோமநாதம். பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்களுள் முதன்மையாக வைத்து எண்ணப்படும் சிறப்பு மிக்கது; வரலாற்றுச் சிறப்பு மிக்கது. மொகலாய மன்னர்களால் பதினெருமுறை கொள்ளையிடப்பெற்றும், இக்காலத்தில் சர் தார் வல்லபாய்படேல் அவர்கள் முயற்சியால் கோடிக் கணக்கில் செலவுசெய்து திருப்பணி செய்யப்பெற்றுப் பொலிவுடன் திகழ்கிறது. இக்கோயில் கோட்டை வடிவில் அமைந்துள்ளது. இத்தலத்தை வழிபட்டோர் முற்பிறப்பை உணர்வர். பிரதான லிங்கம் பூமிக்கடியில் மறைவாக உள்ளது. இரண்யா முதலிய ஐந்து நதிகள் சோமநாதத்திற்கு அருகில் பாய்கின்றன.

சோமன் எனப்படும் சந்திரன் ரோகிணியிடம் மட்டும் அன்பு செலுத்தியதனல் தட்சனல் சாபம் பெற்றான். சாப நீக்கம் பெறுவதற்குப் பிரமதேவன் கட்டளைப்படி இத்தலத்தின் சிவபெருமானைக் குறித்துப் பத்துக் கோடி முறை 'மிருத்யுஞ்சய' மந்திரத்தைச் செபித்தான். சிவபரம் பொருள் வெளிப்பட்டுச் சந்திரனுகிய சோமனுக்கு வளரவும் தேயவும் அருள் வழங்கினர். சோமன் அருள் பெற்ற தலமாதலின் சோமநாதம் எனப்பெற்றது. சோமவாரத்தில் வரும் அமாவசை இரவும், சிவராத்திரியும் இத்தல வழிபாட்டிற்குச் சிறந்த காலமாகக் கருதப்படுகின்றன.

(2) மல்லிகார்ச்சுனம்

அர்ச்சுனம்—மருத மரம், குப்த பரம்பரையில் வந்த இளவரசி சந்

திராவதி என்பவர் மல்லிகை மலர் கொண்டு இங்குள்ள இறைவனைப் பூசித்தமையாலும், அர்ச்சுன விருட்சம்(மருதமரம்) தலவிருட்சமாக இருப்பதாலும், மல்லிகார்ச்சுனம் எனப்பெயர் பெற்றது இத்தலம். இது ஸ்ரீசைலம் எனவும், தேவாரத்துள் திருப்பருப்பதம் எனவும் வழங்கப்படுகிறது. இது பாரத நாட்டின் நடுவிடமாகிய ஆந்திர மாநிலத்தில் உள்ளது. மருதமரத்தைத் தலவிருட்சமாகக் கொண்ட மூன்று தலங்களுள் இது வடக்கில் உள்ளது. தெற்கில் நெல்லை ம வட்டத்தில் புடார்ச்சுனமும் (திருப்புடை மருதூர்) தஞ்சை மாவட்டத்தில் இவ்விரண்டிற்கும் நடுவிலிருப்பதாகிய மத்தியார்ச்சுனமும் (திரு இடை மருதூர்) உள்ளன. சோதிலிங்கத் தலங்களுள் மூவர் தேவாரமும் பெற்ற சிறப்புடைய தலம் இது. ஞானசம்பந்தர் 'சுடுமணி உமிழ் நாகம்' எனத் தொடங்கும் பதிகத்தாலும், நாவரசர் 'கன்றினார் புரங்கள் மூன்றும்' என்னும் பதிகத்தாலும், நாவலர் கோன் 'மானும் மரையினமும்' எனத் தொடங்கும் பதிகத்தாலும் போற்றி வழிபட்டு உள்ளனர்.

நந்தி எம்பெருமான் பர்வத (மலை) வடிவமாகிச் சிவபெருமானைத் தாங்குவதால் பருப்பதம் எனப் பெற்றது. உலகத்தை முதலில் சுற்றி வருபவருக்கே முதலில் திருமணம் எனக்கூறி விநாயகருக்கும், முருகனுக்கும் பெருமானும் பிராட்டியும் ஒரு போட்டியமைத்தனர். விநாயகர் அம்மையப்பரை 'அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்' என்ற கருத்தோடு இருவரையும் ஏழு முறை வலம் வந்து வெற்றி பெற்றுச் சித்தி, புத்தி இருவரையும் திருமணம் புரிந்துகொண்டார். உலகம் முழுவதும் சுற்றிவந்த முருகன் விநாயகர் வெற்றியுற்றது கண்டு சினமுற்றவராய்க் கிரவுஞ்சகிரிக்குச் சென்று பிரம்மசாரியாய் வாழ்கிறார். தாய் தந்தையர் தேடிவந்தனர். வருவதை அறிந்த முருகன் மேலும் அப்பாற் செல்ல, தேவர்களின் வேண்டுகோட்படி மூன்று யோசனை தூரத்தில் தங்கினார். இவரைத் தேடிவந்த அம்மையப்பர் தங்கிய இடமே ஸ்ரீசைலம் என வழங்கப்படுகிறது. இது கயிலைமலைக்குச் சமமாக எண்ணப்படுகிறது. அமாவாசையில் சிவனும், பௌர்ணமியில் அம்மையும் குமரனைச் சென்று கண்டு மகிழ்கின்றனர் என்பது ஐதிகம். லிங்காயத்துக்களான வீர சைவர்கள் இத்தலத்தைப் பூகைலாசம் எனப் பெரிதும் போற்றுகின்றனர். இது கிருஷ்ணா நதிக்கரையருகில் உள்ளது.

ஆதி சங்கரர் தமது சிவானந்த லஹரியில் ஸ்ரீ சைலநாதரை பலவாறாகப் போற்றுகிறார். மேலும் இங்கு அம்பிகை ஆலயத்தில் வைதிக பூஜையும் நிறுவினார். அந்தப் பத்ததி இன்றும் நல்முறையின் உள்ளது.

(3) மகாகாளம்

உஜ்ஜைனி என்னும் ஏழு மோட்சத் தலங்களுள் ஒன்றாகிய அவந்திகா எனப்படுவது, மத்தியப் பிரதேசத்தில் அமைந்துள்ள சோதிலிங்கத் தலமாகும். இத்தலம் பண்டைக்காலத்தில் அமராவதி, அவந்திகா என வழங்கியது. மாளவ தேயத்தின் தலைநகர். விக்கிரமாதித்தனும், அவனுக்கு எதிரியாகிய சாலிவாகனனும் தோன்றிய இடம். இவ்விருவர் பெயராலும் சகாப்தங்கள் தோன்றியுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. காளிதாசர், தண்டி முதலிய புல

வர்கள் வாழ்ந்த இடம். இரு காளி கோயில்கள் இங்கே சிறப் புறத் திகழ்கின்றன. மகாகாளரு டைய திருக்கோயில் சிப்ரா நதிக் கரையில் அமைந்துள்ளது. பன் னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை வரும் கும்பமேளா இங்கே தான் நடக்கிறது.

அவந்தி தேசத்தில் வேதப்பிரி யன் என்ற அந்தணனுடைய குமாரர்கள் நால்வரும், சிவ பூசைச் சிறப்பாலும் நல்லொழுக் கத்தாலும் அந்நாட்டை வள முடையதாக்கினர். அப்பொழுது, இரத்தினமாலா என்னும் மலையி லிருந்து வந்து தூஷணன் என்ற அரக்கன், எங்குமே நன்மை நடக்கவொட்டாது தடுத்தனன். பல ஊர்களிலும் உள்ள அந்தணர் கள் ஒன்றுகூடி வேதப் பிரியனின் குமாரர்களோடு சேர்ந்து, இவ் வரக்கனை அழிக்க இயலாது என்று கருதியவர்களாய் நாள்தோறும் பார்த்திவலிங்க பூஜை செய்து வந்தனர். பார்த்திவலிங்கம் எனில் மண்ணினுல் செய்த லிங் கம் எனப் பொருள். அவர்கள் நாள் தோறும் பூஜை செய்வ தற்கு மண் எடுத்த இடம் பெரிய் குளமாக ஆயிற்று. அந்தணர்கள் யாவரும் பூஜை புரிந்து தியானத் தில் இருக்கும் போது, தூஷணன் என்னும் அரக்கன் அவர்களைத் துன்புறுத்தத் தொடங்கினுன். அப்பொழுது அக்குளத்தினின்றும் மகா காளேசுவரர் தோன்றி அரக்கரை அழித்து அமரர்களைத் காத்தார். அவர்கள் வேண்டு கோளின்படி சிப்ரா நதிக்கரையி லேயே பெருமான் எழுந்தருளி ஞர்.

### (4) ஓங்காரம்

நர்மதா நதியும் காவேரி எனப் படும் நதியும் சங்கமமாகி ஓடி வரும் அமைப்பு ஓங்கார வடிவ மாக உள்ளதால், இத்தலம் ஓங் காரம் எனப் பெற்றது. மத்தியப் பிரதேசத்தில் நர்மதை நதிக்கரை யில் அமைந்துள்ளது. நர்மதா நதியில் பல நிறமுள்ள பாண லிங் கங்கள் கிடைக்கின்றன. கங்கை யாற்றின் இடக் கரைமட்டுமே புனிதமானது என்பர். ஆனுல் நர் மதையின் இரு கரைகளுமே புனிதமானவை யென்று கூறுவர். இப் புண்ணிய நதி, இத்தலத்தில் பிரணவ வடிவமாக ஓடுவது சிறப் பாகும். விநாயகர் ஐந்து முகத் துடன் காட்சி அளிக்கிருர். விந் தியமலை, மேருமலை போல் சிறப் புற வேண்டி, நாரதர் சொற்படி சிவபூஜை செய்யக்கருதி, ஓங்கார ரூபமாய் ஓர் யந்திரம் அமைத்துப் பார்த்திவலிங்க பூசை ஆறுமாத காலம் இயற்றி வரம் பெற்றது. இதுவே ஓங்காரேசுவரம் ஆயிற்று என்பர்.

### (5) வைத்தியநாதம்

இத்தலம் ஆந்திர மாநிலத்தில் (ஐதராபாத்) முற்காலத்தி லிருந்தது. தற்போது மகாராஷ் டிர மாநிலத்தில் விளங்குகிறது. மாபெருந் தூண்களுடன் மர வேலைப்பாடு மிக்கதாகச் சிறந்து விளங்குவது இக்கோயில். தென் ஞட்டில், தஞ்சை மாவட்டத்தில் உள்ள வைத்தியநாதர் ஆலயத் தைப்போலவே முடி இறக்குதல், மாவிளக்குப் போடுதல் முதலிய பிரார்த்தனைகளை மக்கள் இங்கே நிகழ்த்துகின்றனர். சாமகானம் இசைத்துச் சிவனருள் பெற்ற இராவணன், அவரிடமிருந்து ஆத் மலிங்கத்தைப் பெற்று இலங் கைக்கு எடுத்துச் செல்ல முற்பட் டான். இயலாமையினுல் சிவ பெருமானிடம் முறையிட, அதனை அவர் இரு பிளப்பாக்கிக் காவடி யில் வைத்துச்செல்ல அருளினுர். அவ்வாறு தூக்கிச்சென்ற இராவ

ணன் இத்தலத்திற்கு வந்தவுடன், சிறுநீர் கழிக்க வேண்டியிருந்த தால், அருகில் நின்ற சிறுவனிடம் காவடியைக் கொடுக்க, சிறுவனாக வந்த விநாயகர் காவடியைக்கீழே வைத்து மறைந்தார். முற்பகுதி பிளப்பு கோகரணத் தலமாகவும், பிற்பகுதிப் பிளப்பு இத்தலமாக வும் விளங்கலாயின.

(6) பீமசங்கரம்

இத்தலம் மகாராஷ்டிர மாநிலத்தில் பம்பாயிலிருந்து 60 கல் தொலேவில் உள்ளது. காட்டின் நடுவிடத்தில் உள்ளது. ஆலயம் இப்போது சிறிது சிதைந் துள்ள நிலேயில் காணப்படுகிறது. ஆலயம் சிறியது. பீமாநதி இவ் வாலயத்தின் அருகில் உற்பத்தி யாகின்றது. இங்கே இலிங்க மூர்த்தி ஒரு முழ உயரத்தில் காட்சி தருகிருர். கும்பகர்ணனுக் கும் கற்கடி என்ற அரக்கிக்கும் பிறந்த பீமன் என்ற அசுரன், பிரியதர்மன் என்ற அரசனின் சிவ பூசையைத் தடுத்து, அவனேக் கொல்ல முயன்றபோது, சிவபெரு மான் அவ்வரசன் பூசித்த மண்ணு லாகிய சிவலிங்கத்திலிருந்து வெளிப்பட்டு, பீமனேச் சங்கரித்து, தேவர் வேண்டுகோட்கிணங்கிச் சாந்தமூர்த்தியாகப் பீமசங்கரர் என்ற பெயரில் விளங்குகிருர். பீமனேச் சங்கரித்ததால் பீமசங் கரம் என்று பெயர் பெற்றது இத்தலம். (தொடரும்)



# நாமார்க்கும் குடி அல்லோம்!



ஸ்ரீ வி. ஜி.
பன்னீர்தாஸ்

உலகில் மனிதனுய்ப் பிறந்த ஒருவன், தன்னைப் படைத்த ஆண்டவன் ஒருவனுக்குத்தான் அடிமையே தவிர, தன்னைப் போலவே ஆண்டவனுல் படைக்கப்பட்ட இன்னெருரு மனிதனுக்கு எந்தக் காலத்திலும் அடிமை அல்லன்.

அந்த இன்னெருரு மனிதன், உலகிலேயே மிகப்பெரிய பணக்காரனுயிருக்கலாம். உலகிலேயே மிகப்பெரிய அறிவாளியாக இருக்கலாம். உலகிலேயே மிகப் பெரிய ஆற்றலும் அதிகாரமும் படைத்தவனுய் இருக்கலாம். அப்படியிருந்தாலும், அவனுல் தன் விருப்பம் போல் யாருக்கும் நன்மையோ தீமையோ செய்துவிட முடியாது.

அவன் மற்றவர்களுக்குச் செய்வது இருக்கட்டும். தனக்குத் தானே கூட, அவனுல் தன் விருப்பம்போல் ஒரு நன்மையைச் செய்துகொள்ள முடியாது; ஒரு தீமையை விலக்கிக்கொள்ள இயலாது.

எந்த மனிதனுக்கும் வாழ்வில் இன்பத்தையோ துன்பத்தையோ வழங்குபவன் இறைவனே யன்றி வேறு எவனும் அல்லன். எனவே தான், "தீதும் நன்றும் பிறர்தர வாரா!" என்று அறுதியிட்டுக் கூறுகிறது புறநானூறு.

"அப்படியானுல், உலகில் ஒரு சிலர் நமக்கு நன்மை செய்பவர்களாகவும், மற்றும் சிலர் நமக்குத் தீமை செய்பவர்களாகவும் காணப்படுகிறுர்களே; அதற்குக் காரணம் என்ன?" என்று கேட்கிறீர்களா?

ஒருவர் நமக்கு நல்லவராகவும், மற்றெருருவர் நமக்குத் தீயவராகவும் காணப்படுவது, வெறும் போலித் தோற்றமே தவிர உண்மையல்ல. இறைவன் நமக்கு ஓர் இன்பத்தை ஊட்ட எண்ணும் போது, அதற்கு ஒரு மனிதனைத் தன் கருவியாக ஆக்கிக்கொள்கிறுர். அதேபோல், இறைவன் நமக்கு ஒரு துன்பத்தை ஊட்ட எண்ணும்போது, அதற்கு மற்றெருரு மனிதனைத் தன் கருவியாக ஆக்கிகொள்கிறுர். இறைவனது

அந்தக் கருவிகளைத் தான், நாம் நல்ல மனிதர்கள் என்றும் கெட்ட மனிதர்கள் என்று சொல்லுகிறோம்.

கருவிகளுக்கு எப்போதுமே தம் விருப்பம்போல் சுதந்தரமாக இயங்கக் கூடிய சக்தி கிடையாது. கருவிகளை இயக்குபவன் கர்த்தா. அந்தக் கர்த்தாவின் விருப்பப்படி தான் கருவிகளால் இயங்க முடியும். அந்த முறையில் பார்க்கும் போது, நமக்கு ஒருவர் நன்மை செய்தாலும் தீமை செய்தாலும், அதை அவர் தம் சுதந்தரமாகச் செய்வதில்லை என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அவரது உள்ளத்துக்கும் உள்ளேயிருந்து அவரைக் கடவுகின்ற (அதாவது, செலுத்துகின்ற) கர்த்தா தான், அந்த மனிதரின் வாயிலாக நமக்கு இன்ப துன்பங்களை வழங்குகிறார். கடவுகின்ற காரணத்தினாலேயே, அந்தக் கர்த்தாவுக்குக் கடவுள் என்னும் பெயர் வழங்குகிறது.

எனவே, நமக்கு ஒருவர் நன்மை செய்கிறார் அல்லது தீமை செய்கிறார் என்று எண்ணுவது, வெறும் பேதமையன்றி வேறல்ல. உண்மையில், எந்த ஒரு மனிதராலும் நமக்கு நன்மையும் செய்ய முடியாது தீமையும் செய்ய முடியாது. எவருடைய பணமோ அல்லது பதவியோ, அறிவோ அல்லது ஆற்றலோ, நம்மை எதுவும் செய்து விட இயலாது. இந்த தைர்யத்தில்தான், மாபெரும் பல்லவச் சக்கரவர்த்தியாகிய மகேந்திரவர்மனைப் பார்த்து, "நாமார்க்கும் குடியல்லோம்" (அதாவது, "உனக்கு நான் அடிமை அல்லன்") என்றார் அப்பர் பெருமான்!

எல்லா உயிர்களும் இறைவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டவர்கள். அந்த இறைவனுக்கு நாமெல்லாம் இனிய குழந்தைகள். அவன் எந்நாளும் நமக்கு நன்மை செய்வானே தவிர, தீமை செய்ய மாட்டான். சில சமயங்களில் அவன் நமக்குத் தீமை செய்வது போல் தோன்றினாலும் கூட, அதுவும் ஒரு நன்மைக்காகத்தான் இருக்கும். அந்த நம்பிக்கையோடு அவனை நாம் வழிபட்டு வாழ்ந்து வருவோமானால், அவன் நம்மை ஒரு நாளும் கைவிட மாட்டான் என்பது உறுதி!



ஆசிரியரும் வெளியிடுபவரும்: T. ராமனாதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17